# ஒரு முழுமையான சுவை அனுபவத்தை எங்களைத் தவிர வேறு யாரால் தர இயலும்

ஆம், சுவையான ட்ரு பிஸ்கட்களைச் சுவைப்பதே தனி இன்பம், பல்சுவையும், மொரமொரப்பும் கொண்ட ட்ரு பிஸ்கட் வகைகளை அடிக்கடி சுவைக்கும் ஆசையை யாராலும் அடக்க முடியாது. முழுமையான இயற்கை உட்பொருளான தேன், குளுகோஸ், பால்-பவுடர், ஏலக்காய் சத்து, புத்தம் புதிய முற்றிய தேங்காய் முதலியவற்றைக் கொண்டு, நீண்ட பல பரிசோதனைக்குப்பின் தயாரிக்கப்படுவதால்தான் சீரிய பலவகைகளில் உங்களுக்கு கிடைக்கிறது ட்ரு பிஸ்கட்கள்.

**தேன்-குளுகோஸ்**

புஷ்டியான தித்திப்புச்சுவைதரும் தேன்-குளுகோஸ் பிஸ்கட் போதுமான அளவு தேனும் திரவ குளுகோசும் கலந்தது. ஒவ்வொரு பாக்கட்டும் 350 கலோரி சக்தியை அளிக்கிறது.

**நீஸ்**

சுவையான தேங்காய் பிஸ்கட் நீஸ். தேங்காயின் இயற்கைச் சுவையை உங்களுக்கு அளிப்பதற்கென்றே தாராளமாக புத்தம் புதிய முற்றிய தேங்காய் சேர்க்கப்படுகிறது.

**ஏலக்காய் 'கஸ்டர்ட்' க்ரீம்**

நினைத்தாலே நாவூறும், இயற்கையான ஏலக்காய் கலந்த, சுவையான கிரீம் பிஸ்கட், எந்த வகையில் பார்த்தாலும் சிறந்த கிரீம் பிஸ்கட் இதுதான்.

**மாரி**

காபி, டீ வேளைகளில் சேர்த்துச் சாப்பிடும் மிதமான தித்திப்புக் கொண்டது இது. எந்தவகை பானத்துடனும் சேர்த்துச் சாப்பிட மிகச் சிறந்தது.

**மேலும் பல வகைகளும் உண்டு**

மேற்சொன்ன எல்லாவகை பிஸ்கட்களுமே உயர்தர பாக்கிங் பொருட்களைக் கொண்டு பாக் செய்யப்படுகிறது.

பிஸ்கட்டின் மணம், மொரமொரப்பு, புத்தம் புதுத் தன்மை கெடாமல் இருக்கும் பொருட்டு மிக அதிக விலையுள்ள செலஃப்பேன் (Cellophane) பேப்பரை பிஸ்கட்கள் மீது படும்படியாக பாக்கிங் செய்வதில் அதிக அளவு உபயோகப்படுத்தும் ஒரே தயாரிப்பாளர் நாங்கள்தான்.

நீங்களும் உங்கள் குடும்பத்தாரும் முழுமையான சுவையூட்டும் ட்ரு பிஸ்கட் வகைகளைச் சுவைத்து அதன் சீரிய நல்ல தன்மைகளை நீங்களே தெரிந்து கொள்ளுங்கள்.



## ட்ரு பிஸ்கட்கள்




நான்கு அகில உலக "மாண்டே" மெடல்களைப்பெற்றது.

AUROFOOD

தயாரிப்பாளர்:
இந்தியாவின் மிகநவீனமான மாவு மில்லும், பிஸ்கட் பாக்டரியும் இணைந்ததொழிற்குழுமம்

Headstart/ATM/104

# Kalki Shopping Page

# உன்னை ஒன்று கேட்பேன்!



**பிரபல பின்னணிப் பாடகர் மற்றொருவரிடம் ஒரு கேள்வி கேட்க, அவர் அதற்குப் பதில் கூறிவிட்டு இன்னொருவரிடம் ஒரு கேள்வி தொடுக்க, இறுதியில் கேள்வி ஆரம்பித்த இடத்துக்கே திரும்புகிறது!**

எஸ். பி. பாலசுப்ரமண்யம் வாணி ஜெயராமிடம் கேட்ட கேள்வி; ''உங்களது முதல் பாடலான''போலேரேபப்பி''என்ற ஹிந்திப் பாடலே வடநாட்டில் ஒரு பெரும் பரபரப்பை ஏற்படுத்தியது. நீங்கள் அங்கு பல்வேறுவிதமான பிரச்னைகளுக்கு நடுவில் இருந்தீர்கள் என்பதையும் நான் அறிவேன். தமிழகத்தில் நீங்கள் முதல்தரப் பாடகிகளின் வரிசையில் சேர்ந்த பிறகு வடநாட்டில் உங்களுக்கு வரவேற்பு அதிகமிருந்ததா? நீங்கள் மீராவில் பாடிய பிறகு மேலும் ஒரு பரபரப்பை ஏற்படுத்தினீர்கள் இல்லையா? இவைகளெல்லாம் வடநாட்டில் உங்களுக்கு அதிகம் வரவேற்பைத் தரும் இல்லையா?''

வாணியின் பதில்: ''ஆண்டவனுக்கே வெளிச்சம். அவன் இருப்பதை நான் நம்புகிறவள்.''

வாணி ஜெயராம் P. B. சீனிவாசைக் கேட்கிறார்:

''உங்களுக்குப் பல மொழிகளிலும் வடமொழிகளிலும் சரி, தென் மொழிகளிலும் சரி புலமை உண்டு. நீங்களே ஏன் சொந்தமாகப் பாடல் எழுதி இசையமைத்துப் பாடக்கூடாது படங்களில்?''

P. B. சீனிவாஸ் பதில்:

''பன்மொழிப் புலமை கொண்டாலும்
பல்வகைத் திறமை கொண்டாலும்
எவரும் நல்வாய்ப்பைப் பெறவேண்டும்
எதற்கும் சமயம் வரவேண்டும்.''

P. B. சீனிவாஸ் ஜானகியிடம் கேட்கிறார்:

''கலைமாமரக் கிளையிலமர்ந்து
பாட்டுப் பாடும் குயிலே
அலைகள் போன்ற சங்கதிகள்
எழுப்பும் உணர்ச்சிக் கடலே
இசையில் ஏழு சுரங்கள் உண்டு
சுரங்களிலே அமுதம் உண்டு
பசியை மறந்து உன் பாட்டை ரசிக்கும்
இதயம் உண்டு
இறைவன் உங்கள் இசையை
ரசித்து வந்து முன்னால் நின்றால்
எதையும் நான் தருவேன்
உனக்கு என்னவேண்டுமென்றால்
நெஞ்சம் புகிர் மாலை பின்னை
நீங்கள் தரும் பதில் என்ன?''

ஜானகியின் பதில்:

''சங்கீதத்தின் சங்கமமே சாந்தி என்பேன்
சந்தோஷத்தில் அவன் அடியைப் பற்றிக்
கொள்வேன்
மங்காமல் எந்நாளும் அவன் புகழை
மறவாமல் பாடிடவே வேண்டி நிற்பேன்''

கருத்தை ஜானகி சொல்ல திருபார் இயற்றிய கவிதை இது.

ஜானகி ஜேசுதாஸிடம் கேட்ட கேள்வி:

''இசையின் தரம் கீழே போய்க்கொண்டிருப்பதற்கான காரணம் என்ன?''

ஜேசுதாஸின் பதில்:

'''கேக்கறவங்க யாரோ அவங்கதான் அதற்குப் பதில் சொல்லணும்' என்று நான் சொல்லி விட்டால் ஜானகி அவர்களைக் குறிப்பிட்டுவிட்டதாக நினைக்காதீர்கள்! நான் குறிப்பிட்டது கேட்கும் ரசிகர்களை. நல்ல பாடல்களை ரசித்துக் கேட்டு நல்லவை அல்லாத பாடல்களை நிராகரித்தால் ஏன் தரம் உயராது?''

---

✕ படங்கள்: P. B. ஸ்ரீனிவாஸ், ஜேசுதாஸ், பி. சுசீலா, எஸ். பி, பாலசுப்பிரமணியம், ஜானகி, வாணி ஜெயராம்

ஜேசுதாஸ் சுசீலாவிடம் கேட்கிறார்:

''பாடின பாடல்கள் மாதிரியே திரும்பவும் பாட வாய்ப்புக் கிடைக்கும்போது நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?''

சுசீலாவின் பதில்:

''இசையே இனிமையானது. அதை எப்பொழுது எத்தனை முறை கேட்டாலும் யாராலும் ரசிக்க முடியும். உதாரணத்துக்குத் தியாகப்ரும்மத்தின் பாடல்களை எவ்வளவு தரம் யார் பாடினாலும் ரசிக்கத்தானே செய்கிறோம்? ஹிந்தியில் வெளிவந்த ஒரு பாடலை அப்படியே தமிழாக்கம் செய்யும் போது இங்கேயும் ரசிக்கிறார்களே! நீங்கள் குறிப்பிடுவது போல் ஒரு பாட்டைப் போன்றே மற்றொரு பாடல் முழுமையாக இராது. அப்படியே இருந்தாலும் நான் சந்தோஷத்தோடு பாடுவேன். காரணம் இசை எல்லாவற்றையும் கடந்தது.''

சுசீலா எஸ். பி. பாலசுப்பிரமணியத்தைக் கேட்ட கேள்வி:

''கர்னாடக இசையில் ஆரம்பித்த திரை இசை, பிறகு சிறிது சிறிதாக மாறி மெல்லிசை, பிறகு டிஸ்கோ, சாசா என்று உரு மாறிவிட்டது. ஏனிந்த மாற்றம்?''

எஸ். பி. பாலசுப்பிரமணியம் பதில்:

''காலங்கள் மாற எண்ணங்கள் மாறுகின்றன. எண்ணங்கள் மாறச் செயல்கள் வேறுபடுகின்றன. என்னதான் நாம் மாறுபட்டு வேறுபட்டுச் சென்றாலும் முடிவென்னவோ ஆரம்ப இடம்தான். ஓம்காரத்தில் ஆரம்பித்த இசை திரும்பவும் அங்குதான் போய்ச் சேரும். நல்லவையான மாற்றங்களை எடுத்துக்கொள்வோம். ரசிப்போம். அல்லாதவைகளை விட்டுவிடுவோம்.''

பேட்டி: ''சலன்''



''இதென்ன! உங்கள் இதயகீதம் பக்க வாத்தியங்களுடன் ஒலிக்கிறது?''

''பாக்கெட் ரேடியோவில் இளைய ராஜா பாடுகிறார்!...''



# இசையுடன் இணைந்த நடிப்பு!

தமிழகத்தில் பல நட்சத்திரங்கள் திரைப்படங்களில் பாடியிருக்கிறார்கள். அவர்கள் எல்லோரையும் பேட்டி காண வேண்டுமென்ற ஆசைதான். என்றாலும் நேரமும் இடமும் இல்லை. அதனால் ஒரு சிலரை மட்டும் இங்கே காணலாமா?

தங்கள் முதல் பாட்டு அனுபவம் பற்றிக் கூறுகிறார்கள்:

**மனோரமா:**

'பாடப்பாட ராகம்' என்று ஒரு பழமொழி உண்டு. அதன்படிதான் நான் படங்களில் பாடவே ஆரம்பித்தேன் என்று கூறலாம். நாடகங்களில் பாடிக் கொண்டிருந்த நான் படங்களில் பாடுவேன் என்று முதலில் நினைக்கவே இல்லை. குமார் அவர்களுக்கு நான் பாடுவது நன்றாகவே தெரியும். அவரது ''மகளே உன் சமத்து'' படத்தில் என்னைப் பாடச் சொன்னார்.. நானும் எல். ஆர். ஈஸ்வரி அவர்களும் சேர்ந்து

நாத்தா நாத்தா பொடி கொடு-இந்தத்
தள்ளாத வயதில் ஏன் சடுகுடு

என்ற பாடலைப் பாடினோம். எனக்குப் பிடித்தமான பாடல் எது என்று சொல்லப் போனால் 'வாழ நினைத்தால் வாழலாம்' என்ற படத்தில் எனது நடிப்பு மட்டுமல்ல நான் பாடிய பாடலையும் கூறலாம்.

**மு. க. முத்து:**

சொந்தக்காரங்க எனக்கு
ரொம்பப் பேருங்க—நா
சொந்தா மதிக்கிறது உங்க
அன்பைத்தானுங்க

இதுதான் நான் பாடிய முதல் பாடல். நான் நினைத்தது போலவே பாட்டும் அமைந்து விட்டது. சிறு வயது முதலே கர்நாடக சங்கீதம் கற்றுக் கொள்ள ஆரம்பித்தேன். வர்ணம் வரைக்கும் வந்த நான் அதற்கு மேல் படங்களில் நடிக்க ஆரம்பித்ததால் அவற்றில் பாட ஆரம்பித்



✱ மு. க. முத்து
✱ ஜெயலலிதா
✱ சுமித்ரா
✱ எல். ஆர். ஈஸ்வரி
✱ மனோரமா
✱ கமல்





தேன். நான் நடிக்கும் படங்களில் எல்லாம் பாடவேண்டும் என்பது என் ஆசை மட்டு மல்ல எனது தயாரிப்பாளரும், இயக்குனரும் விரும்பினார்கள். எனக்கு மறக்க முடியாத நிகழ்ச்சி: 'சிரித்தால் சிரிக்கும் உலகமிது' என்ற ''நம்பிக்கை நட்சத்திரம்'' படத்தின் பாடலை முடித்துவிட்டுத் திரைப்பட உலகின் தலைசிறந்த மேதை திரு எல். வி. பிரசாத் அவர்களைச் சந்திக்க ஒரு வாய்ப்புக் கிடைத் தது. அவர் என்னைப் பார்த்து. ''நீ பாடி நடிக்கிறாயாமே! நீ வளர்க'' என்று கூறினார். நான் மெய்சிலிர்த்து நின்றேன்.

**சுமித்ரா**

நானும் கவிஞர் ஆலங்குடி சோமு அவர் களும் மற்றும் படப் பிடிப்புக் குழுவினரும் ரயிலில் சென்று கொண்டிருந்தோம். பொழுது போக வேண்டும் என்பதற்காக ஆளுக்கொரு பாடல்பாட வேண்டும் என்று முடிவு செய்தோம். என்னுடைய முறை வந்தவுடன் நானும் ஏதோ பாடினேன். ''சுமித்ரா! இவ்வளவு நன்றாகப் பாடுகிறீர் களே! நீங்கள் ஏன் படங்களில் பாடக் கூடாது?'' என்று கேட்டார் சோமு. நான் அவர் ஏதோ ஜோக் அடிக்கிறார் என்று பேசா மல் இருந்துவிட்டேன். ஒரு நாள் திடீரென்று வந்து. ''நம்ம படத்தில் நீங்கள் பாடு கிறீர்கள்; நாளை ரிகார்டிங்'' என்றார். நான் பாடிய பாடலின் முதல் வரிகள்:

பூவாகப் பிறந்திருந்தால்
பூஜை செய்ய மனிதருண்டு

படம்: ''மாதங்களில் அவள் மார்கழி'' அதற் குப் பிறகு நான் பாட வில்லை. காரணம் அந்தப் படம் வெளிவந்தால் தானே மற்ற படங்களில் பாடசான்ஸ் கிடைக்கும்?

பேட்டி: புத்தனேரி சுப் பிரமணியம்: அசோக் குமார்.




Kamalahasan

16. 10. 79

அன்பார்ந்த 'கல்கி'
நேயர்களுக்கு,
வணக்கம்.
எனக்குக் கர்நாடக சங்கீதமும் பிடிக்கும். இனிமைப் பாட்டும் பிடிக்கும்.
இனிமைப் பாட்டு மெல்லிசை அல்ல; நல்லிசைதான்.
வல்லிசை அல்ல; மெல்லிசை தான்.
அதனால்தான் நானும் இனிமையாய் பாட முயல்கிறேன். நீங்களும் ரசிக்கிறீர்கள்.
எனக்கு மிகவும் பிடித்த இனிமைப் பாட்டு:—
''தேசுலாவுதே தேன்மலராலே...''
என்ற பாட்டு. படம்: 'மணாளனே மங்கையின் பாக்கியம்'. பாடியவர்கள்: கண்டசாலா—பி. சுசீலா.
உங்கள் அன்புள்ள,
கமலஹாசன்.

இந்த இதழில்:
**கமலஹாசன் Blowup**
புகைப்படம் எடுத்தவர்: 'மோனலிசா'
(கம்பியை நீக்கித் தனியே எடுக்கலாம்)




# புதிய குரல்கள்; இளம் குருத்துக்கள்







**குமாரி எஸ். பி. ஷைலஜா**

**1977** ஆம் ஆண்டு சிங்கப்பூர் செல்ல இருந்த அண்ணன் எஸ். பி. பாலசுப்ரமணியத்தை வழி அனுப்ப விமான நிலையம் சென்ற போது தற்செயலாகப் பிரபல தெலுங்கு இசையமைப்பாளர் சக்கரவர்த்தியை அங்கு சந்தித்தோம். ஃபிளைட் ஒரு மணி நேரம் தாமதம் என்று சொன்னபோது எல்லோருக்கும் சற்றுக் கோபமாகத்தான் இருந்தது. பொழுது போக்க ஒரு பாட்டுப் பாடச் சொல்லிக்கேட்டார் சக்கரவர்த்தி. பாட்டைப் பாடினேன். விரைவு ''மார்பு'' தெலுங்குப் படத்தில் என் தங்கையுடன் நான் முதன் முதலாகப் பாடிய திரைப் படப் பாடல் ''இத்தரம் மே மித்திரம்'' அரங்கேறியது.

தமிழில் என்னை அறிமுகப்படுத்தியவர் இளையராஜா. ''பொண்ணு ஊருக்குப் புதுசு'' என்ற அவர் இசையமைத்த படத்தில் ''சோலைக் கிளியே'' என்ற பாடல் ஹிட்டாகியது. வரப்போகும் ''ஒப்பந்தம்'' படத்துக்காக நான் பாடியுள்ள ''ஓரேமுகம் நிலாமுகம்..'' என்ற பாடல் ரசிகர்களிடையே பாப்புலராகும் என்பது என் நம்பிக்கை. என்னை உருவாக்கிய இளையராஜாவை நான் என்றும் மறக்க முடியாது.

ஒவ்வொரு பாடல் பதிவுக்குப் போகும் போதும், ஏதாவது ஒரு சித்திரம் வரைந்தால்தான் எனக்கு 'மூட்' வரும்!

**குமாரி ஆர். ரமணி**

சென்னை ராணி மேரி கல்லூரியில் நான் படித்துக் கொண்டிருந்தபோது, கல்லூரி விழாவுக்காக ஜேசுதாஸ் பாடிய ''விழியே கதை எழுது'' என்ற பாட்டைப் பாடினேன். என்னுடன் படித்த ஜேசுதாஸின் தங்கை என் குரலைப்பற்றி அண்ணனிடம் கூற, அவர் சங்கர் கணேஷிடம் சிபாரிசு செய்தார். 1975 ஆம் ஆண்டு என் முதல் பாடல் சங்கர் கணேஷ் இசையமைப்பில் ''அநுக்ரஹம்'' மலையாளப் படத்துக்காக ரிகார்ட் ஆகியது. ஜேசுதாஸுடன் நான் பாடிய ''கரும்பு நீர் ஒழுகுன்னு பம்பாநதி'' என்ற அப்பாடல் ஹிட்டாகியது.

தொடர்ந்து ''அடுக்குமல்லி'' படத்தில் ''தென்னைமரத்தின்'' பாடல் பிரபலமாகியது. வெளி வரப்போகும் ''ஒரு கல் கதை சொல்கிறது'' படத்திற்காக சங்கர் கணேஷ் இசையமைப்பில் ''உன்னைத்தான் நினைக்கிறேன்'' என்ற பாட்டைப் பாடியிருக்கிறேன். அது எனக்கு ரொம்பவும் பிடித்தது. என்னை உருவாக்கி, தொடர்ந்து ஆதரவு தரும் சங்கர்

கணேஷ் அவர்களுக்கு நான் என்றும் கடமைப் பட்டவள்.

இளைய ராஜாவின் மேடைக் கச்சேரியில் எனக்குப் பாட அனுமதி கிடைத்தாலும், சினிமாவில் எனக்கு அவர் வாய்ப்புகள் தராதது, மனக்குக் கஷ்டமாகத்தான் இருக்கிறது. எதிர்காலம் புதுப்பாடகர்களுக்குப் பிரகாசமாக இருக்கும் என்பது என் நம்பிக்கை.

பாடல் பதிவுக்குச் செல்லு முன் அதிகமாக ஜிலேபி சாப்பிடுவது உண்டு.




**குமாரி சுவர்ணலதா**

சிங்கப்பூரில் இருந்தபோதே, எனக்கு சினிமாப் பாடல்கள் என்றால் உயிர். மலேயா ரேடியோவில் பல பாடல்களைப் பாடியுள்ளேன்.

சென்னை வந்தபோது, என் குரலைக் கேட்ட, ஜெயஸ்ரீ பிக்சர்ஸ் அதிபர் திரு ரமணன் அவரது ரேடியோ விளம்பரங்கள் மூலம் என்னை அறிமுகப்படுத்தினார்.



ரேடியோவில் என் குரலைக் கேட்ட இளைய ராஜாவிடமிருந்து எனக்கு அழைப்பு வந்தது. ஏவி. எம். நிலையத்தில் நடந்த குரல் ஒத்திகைக்காக, அவர் இசையமைத்த ''பூவரசம்பூ பூத்தாச்சு'' பாடியதுதான் தாமதம், 'பிரமாதம்' என்று பாராட்டினார். அவரது இசையமைப்பில் வெளி வரப்போகும் ''இளைய ராஜாவின் ரசிகை'' படத்துக்காக ''மாலைச் செவ்வானம்...'' பாடலை அவரோடு இணைந்து பாடினேன். முதல் பாடலே அவரோடு இணைந்து பாடியது எனக்கு ரொம்பப் பெருமையாகத்தான் இருந்தது. எனக்கு இவ்வளவு தூரம் ஆதரவு காட்டிய இளைய ராஜாவை என் குருவாகவே மதிக்கிறேன்.




**குமாரி பி. எஸ். சசிரேகா**

நாங்கள் பெங்களூரில் இருந்த போது (1969) அங்கு கச்சேரிக்காக வந்திருந்த இசையமைப்பாளர் எம். எஸ். விஸ்வநாதன், என் குரலைக்கேட்டு என்னைச் சென்னைக்கு வந்து பாடும்படி கேட்டார். சென்னைக்கு வந்த போது என்னைப் பலருக்கு அறிமுகம் செய்து வைத்து, திரைப்படத்துறையில் என்னையும் ஒரு பின்னணிப்பாடகியாக ஆக்கிய பெருமை அவரையே சாரும்.

நான் முதலில் பாடியது ஜி. கே. வெங்கடேஷ் இசையமைத்த ''பொண்ணுக்குத் தங்க மனசு'' படத்தில் வரும் ''தஞ்சாவூர் சீமை







ஒரு கோவிலுக்கு ஒலிபெருக்கி ஒன்றை உபயமாகக் கொடுத்தான் ஒருவன். அதில் எழுதியிருந்த குறிப்பு: "என் மனைவியின் ஞாபகார்த்தமாக..."

-பிரேமா அரவிந்தன்

---

யிலே". பூரணியுடன் பாடினேன். பிறகு எம். எஸ். வி. இசையமைப்பிலும் பாடினேன். சுசீலா, டி. எம். எஸ்ஸுடன் பாடும்போது பயமாக இருந்தாலும் பாடல் ஹிட்டாகியது. சங்கர் கணேஷ் என்னை மேலும் ஊக்குவித்தார். "மலைச்சாரலிலே..." பாடல் பலரின் பாராட்டை எனக்குத் தந்தது. இளையராஜா இசையமைத்து நான் பாடிய பாடல் "வாழ்வே மாயமா...." வரப்போகும் "அண்ணன் தம்பி" படத்தில் திரு எம். எஸ். வி. இசையமைக்க நான் பாடும் "ஒவ்வொரு ராத்திரி ஒரு பாட்டு" என்ற பாடல் எனக்கு ரொம்பப் பிடிக்கும். பொதுவாகப் புதிய பாடகர்களுக்கு, அதிகமாக வாய்ப்புக் கிடைப்பதில்லை என்று தான் நான் வருத்தத்தோடு சொல்லவேண்டியுள்ளது.

பாடல் பதிவுக்குச் செல்லுமுன் லேட்டாக ரொட்டித் துண்டங்கள்தான் சாப்பிடுவேன்.

## திரு மலேசியா வாசுதேவன்

எனக்கு சினிமா மோகம் சின்ன வயதிலிருந்தே உண்டு. மலேசியா வரும் தமிழ்ப் படங்களை எல்லாம் பார்த்துவிடுவேன். மேலும் பலகாலம் மலேசியா டெலிவிஷனில் நடித்து வந்தேன். நடிப்பு ஆசையால் 1969 ஆம் ஆண்டு சென்னை வந்தபோது, என் வாழ்க்கையே மாறிவிட்டது. தயாரிப்பாளர் பொள்ளாச்சி ரத்தினம் அவரது படமான "டெல்லி டு மெட்ராஸ்" படத்தில் "பாலுவிக்கிற பக்கம்மா" என்று ஒரு பாடலைப் பாடச்சொல்லி அரங்கேற்றினார். அதோடு என் நடிப்பு ஆசை மாறி இளையராஜா சகோதரர்கள் தொடங்கிய "பாவலர் சகோதரர்கள்" இசைக்குழுவில் பாடகனாக அறிமுகமானேன்.

இளையராஜாவை இசையமைப்பாளராக மாற்றிய "பதினாறு வயதினிலே" படத்தில் எனக்கு அவர் வாய்ப்பு அளித்து, "ஆட்டுக்குட்டி முட்டையிட்டு..." பாடலைப் பாடச் சொன்னார். அப்பாடல்தான் தமிழ்த் திரைப் பட ரசிகர்களுக்கு என்னை அறிமுகப்படுத்தியது. தொடர்ந்து அவர் இசையமைக்கும் படங்களில் எனக்கு வாய்ப்பு அளித்து வழி காட்டினார்.

வரப்போகும் படமான "மணிப்பூர் மாமியார்" படத்தில் நான் பாடும் "ஆனந்தத்தேன் கலந்த தாலாட்டு..." எனக்குப் பிடித்த பாடலாகும்.

பாடுவதற்கு முன் வஞ்சமில்லாமல் நன்றாகச் சாப்பிடுவது தான் எனக்குப் பிடிக்கும்.

## குமாரி ஜென்ஸி அண்டனி

சதா ஏதாவது பாடலை முணுமுணுத்துக் கொண்டிருப்பது என் பழக்கம். என் குரலைக் கேட்டுக் கொச்சியில் எங்களது வீட்டுக்கு அருகிலுள்ள மலையாள இசையமைப்பாளர் எம். கே. அர்ஜுனன் மாஸ்டர் 1974ம் ஆம் ஆண்டு தாம் இசையமைத்த "வேழாம்பல்" படத்தில் குருவாயூரப்பன் பற்றிய பாடலைப் பாடச்சொன்னார். அதுதான் என் முதல் திரைப்பாடல், மலையாளத்தில் எனக்குப் பெரும் பெயர் சம்பாதித்துத் தந்தது.

ஜேசுதாஸ், 1977ஆம் ஆண்டு இளையராஜாவிடம் என்னை அறிமுகப்படுத்தினார். தமிழில் நான் பாடிய முதல் பாட்டு, இளையராஜா இசையமைத்த "முள்ளும் மலரும்" படத்தில் வரும் "அடிபெண்ணே." புதிய வார்ப்புக்களில் அவர் இசையில்மலர்ந்த "தம் தனனம்...." எனக்குப் பெரும் புகழைக் கொடுத்தது. என்னைத் தமிழில் அறிமுகப் படுத்திப் பிரபல மடையாச் செய்த இளையராஜாவை நான் மறக்க முடியாது.

வரப்போகும் "முகத்தில் முகம் பார்க்கலாம்" படத்தில் நான் பாடும் "அக்கா ஒரு ராஜாத்தி" எனக்கு ரொம்பப் பிடிக்கும் பாடல். புதிய குரல்களுக்குப் பாட அதிக வாய்ப்பு உள்ளது என்பதற்கு நானே ஓர் உதாரணம். பாடல் பதிவின் போது என் எதிரி ஐஸ் வாட்டர்.

## திரு வி. கிருஷ்ணமூர்த்தி

கோவையில் நான் எஸ். எஸ். எல். ஸி. படிக்கும் போதே அங்குள்ள மாடர்ன் ஆர்கெஸ்ட்ராவில் பாடிவந்தேன்.

பின்பு சென்னைக்கு 1965ல் வந்து "ஜார்ஜ் டவுன் ஆர்கெஸ்ட்ரா"வில் பாடி வந்தபோது இசையமைப்பாளர் திரு ராஜேஸ்வரராவ், என்னைப் பற்றிக் கேள்விப்பட்டு, தாம் இசையமைத்த "குருவே தெய்வம்" படத்தில் வரும் "தேனே அமுதே செல்வமே..." என்ற பாடலைப்பாட வாய்ப்பு அளித்தார். ஆனால் படம் பாதியிலே நின்று, வெளிவரவில்லை. எனக்கு ரொம்ப ஏமாற்றம்.

தொடர்ந்து மேடைக் கச்சேரி செய்த எனக்குத் திரையில் பாட வாய்ப்பு அளித்த சங்கர்கணேஷை நான் என்றும் மறக்க முடியாது. அவர்கள் இசையமைத்த "பாலாபிஷேகம்" படத்தில் "மச்சானே அச்சாரம்"... என்ற பாடலைப் பாட எனக்கு வாய்ப்பளித்தார்கள்.

எனக்கு ஊக்கமும், உற்சாகமும் அளித்தார் இளையராஜா. அவர் இசையமைப்பில் வெளி வரப்போகும் "கரும்புவில்" படத்தில் "அடி நாகு ராசாக்கிளி" என்ற பாட்டைப் பாடியுள்ளேன். புதுமுகப் பாடகர்களுக்கு வாய்ப்பு அதிகம் இருக்கிறது. பாடுவதற்கு முன் எப்போதும், வாழ்மினகு, பனம் கல்

கண்டு, வாயில் அடக்கிக் கொள்ள மறக்க மாட்டேன்.

## திருமதி எம். பூரணி

நான் பிரபல பாடகர் எஸ்.ஜி. கிட்டப்பா பரம்பரை வழி வந்ததால் இயற்கையிலேயே எனக்கு சங்கீத ஞானம் இருந்தது. மேலும் இசையில் ஈடுபாடு கொண்ட நடிகை சந்திர காந்தாவின் தம்பி திரு. டி. கே. மணியனுடன் என் திருமணமும் நடந்தது ''சொல்லத் தான் நினைக்கிறேன்'' நாடகத்துக்கு, ''பாவலர் சகோதரர்கள்'' என்ற பெயரில் இளையராஜா இசையமைத்தார்.

என் குரலைக் கேட்டு இளையராஜாவும், வசனகர்த்தா பாலமுருகனும், என்னை இசையமைப்பாளர் ஜி. கே. வெங்கடேஷுக்கு அறிமுகப்படுத்தினார்கள். அவர் இசையமைத்த ''பொண்ணுக்குத் தங்க மனசு'' படத்தில் வரும் ''தஞ்சாவூர் சீமையிலே'' தான் என் முதல் திரைப்பாடல்.

இளையராஜா, தாம் இசையமைத்த ''அவர் எனக்கே சொந்தம்'' படத்தில் வரும் ''தேவன் திருச்சபை மலர்களே...'' என்ற பாடலைப் பாடச் செய்து எனக்குப் பெரும் புகழைக் கொடுத்தார்.

என்னை உருவாக்கிப் பிரபலப்படுத்திய குரு, இளையராஜாவைப் பெரிதும் மதிக்கிறேன்.

இவ்வளவு நல்ல குரல் இருந்தும் எனக்கு அதிகமாக வாய்ப்புகள் கிடைப்பதில்லை. புதிய பாடகர்களுக்கு இதுதான் கதியோ என்று நினைக்கும்போது வருத்தமாகத் தான் இருக்கிறது.

ஒவ்வொரு பாடல் பதிவின்போதும், என் கணவரை நமஸ்கரித்து விட்டுச் செல்வது என் வழக்கம்.

## திரு. கோவை முரளி

பி. ஏ. படித்து முடித்துவிட்டுக் கோவையில் சினிமா ஆர்வத்தால் நானே ''காமெட் ஆர்கெஸ்ட்ரா'' என்ற பெயரில் ஒரு குழுவை ஆரம்பித்தேன். தொடர்ந்து ''இயோபோனி முரளி'' என்பவர் தமது இசைக்குழுவில் என்னைப் பாடவைத்து என் கலையார்வத்தை வளர்த்தார். அவரது குழுவில் கச்சேரி செய்யும் போது இளையராஜாவின் அறிமுகம் கிடைத்தது. கோவையிலிருந்த என்னைச் சென்னை வரச் சொன்னார். என்னிடம் பேசும் போதே எனக்குத் தனியாகக் குரல் ஒத்திகை தேவையில்லை என்று அவர் கூறியது எனக்குப் பெருமையாக இருந்தது. அவர் இசையமைத்த ''இது எப்படி இருக்கு'' படத்தில் வரும் ''கைரேகை ஜோசியம்....'' பாடலைப் பாட எனக்கு வாய்ப்பளித்தார். புதுமுகமான எனக்கு அவர் அளித்த ஆதரவை என்னால் மறக்கவே முடியாது.

சினிமா உலகில், சில பாடகர்களே 'டாமினேட்' செய்யாமல் என்னைப் போன்ற புதுப் பாடகர்களுக்கும் வழிவகுத்துத் தரவேண்டும் என்பது என் ஆழ்ந்த கருத்து.



இந்திப் பட உலகில் பிரபல பின்னணிப் பாடகி (லதா?) ஒரு பாட்டுக்கு 20 ஆயிரம் ரூபாய் வாங்குகிறார். ஆம்! ஒரு பாட்டுக்கு! அதுமட்டுமல்ல, 20 ஆயிரம் ரூபாய் கொடுத்தாலும் ஒரு நாளைக்கு ஒரு பாட்டுக்கு மேல் பாடுவதில்லை இவர்!

அவருக்கு அடுத்தபடியாக அதிக தொகை பெறுபவர் (கிஷோர் குமார்?) ஒரு பாடலுக்கு 15 அல்லது 16 ஆயிரம் ரூபாய் வாங்குகிறார்!

—சம்பத்குமாரி: ஆதாரம்: ''ஸண்டே''

---

சங்கர் கணேஷ் மேடை நிகழ்ச்சிகளில் நான் பாடினாலும், அவர்கள் இசையமைப்பில் உருவாகும் திரைப்படங்களில் ஏனோ வாய்ப்பு அதிகமில்லை என்பதை நினைத்தால் வருத்தமாகத்தான் இருக்கிறது.

வெளிவரப் போகும் ''வெளிச்சம் விளக்கைத் தேடுகிறது'' படத்தில் ''நம்ம ஊர் அம்மாவுக்கு ஏத்தங்க தீபமே'' என்று நான் பாடும் பாடல் எனக்கு ரொம்பப் பிடிக்கும்.

பாடல் பதிவு இருக்கும் நாட்களில் குளிர் பானங்கள் எதுவும் சாப்பிடமாட்டேன்.

## திருமதி ஷோபா

எங்கள் குடும்பமே கலைக் குடும்பம். நான் என் சகோதரர்கள் சுந்தர், சுரேந்தர், எல்லோரும் சேர்ந்து ''லலிதாஞ்சலி'' என்ற மெல்லிசைக் குழு நடத்தி வந்தோம். என் மேடைக் கச்சேரியைக் கேட்ட மெல்லிசை மன்னர் எம். எஸ். விஸ்வநாதன் என் பத்தாவது வயதிலேயே எனக்கு முதன் முதலாகத் திரையில் பாடும் வாய்ப்பளித்தார்.

''இரு மலர்கள்'' என்ற படத்தில் டி. எம். எஸ்ஸுடன் நான் பாடிய ''மகராஜா ஒரு மகாராணி'' தான் நான் திரையில் பாடிய முதல் பாடலாகும்.

என்னைத் திரையில் முதன் முதலாக அறிமுகப்படுத்திய எம். எஸ். வி. அவர்களை என்னால் என்றும் மறக்க முடியாது.

தொடர்ந்து என்னை ஊக்குவித்த இளையராஜா, தாம் இசையமைத்த ''அவள் ஒரு பச்சைக்குழந்தை'' படத்தில் என்னைப் பயன்படுத்தினார். நான் பாடிய ''பொண்ணு பார்க்க வந்தாரு மாப்பிளே'' ''மாலை-இளம் வயதில்...'' ஆகியவை பிரபலமாகி எனக்குப் புகழைக் கொடுத்தன. ஆனால் அதற்குப் பிறகு ஒரு வாய்ப்புக்கூட அவர் எனக்குக் கொடுக்காததின் காரணம் என்னவோ தெரியவில்லை.

வரப் போகும் ''உன்னிடம் மயங்குகிறேன்'' படத்தில் வரும் பாடல்கள் எனக்கு ரொம்பப் பிடித்தமானவை. திரை இசைத் துறையில் எனக்கு நல்ல எதிர் காலம் உண்டு என்று உறுதியாக நம்புகிறேன்.

பேட்டி: ''சிக்கி''

## பக்தர்களுக்கும் பெற்றோர்களுக்கும் நல்ல செய்தி!

1. சாமியே சரணம்: சபரிமலை சாஸ்தாவின் லீலா விநோதங்களைக் கூறும் ஒரு அரிய புத்தகம் — விலை ரூ. 1-00
2. ஸ்ரீ சந்தோஷி மாதா: (பூஜையும் கதையும்) திருமணத்திற்காகக் காத்து நிற்கும் பெண்களுக்கு ஒரு வழிகாட்டி. சந்தோஷி மாதா பூஜையை ஏற்றுக் கொண்ட மாத்திரத்திலேயே திருமணம் நடந்த பெண்கள் எவ்வளவு பேர்? பெண்ணின் திருமணம் நடக்கவில்லையே எனக் கவலைப்படும் பெற்றோர்களுக்கு வழிகாட்டும் நூல் — விலை ரூ. 2-00

செல்வம் செழிக்க, வியாபாரம் விருத்தியாக சந்தோஷி மாதாவை நாடுங்கள்

3. மஹா பிரதோஷ மகிமை: பிரதோஷ காலத்தின் சிறப்பு, பிரதோஷ காலத்தில் ஆடவல்லானைத் தரிசிப்பதின் சிறப்பு பற்றி விளக்கும் புத்தகம் — விலை ரூ. 2-00
4. விவாஹப் பொருத்த அட்டவணை: உங்கள் பெண்ணிற்கு ஒரு வரன் வந்திருக்கிறது. வரனின் நட்சத்திரம் சுமாரானதா? சிறந்ததா? அல்லது மிகச் சிறந்ததா? என கூறும் புத்தகம் — விலை ரூ. 1-00
5. சனி பெயர்ச்சி: 12 ராசிகளுக்கும் சுருக்கமான முறையில் சனி பகவான் செய்யும் மாற்றங்களைக் கூறும் நூல் — விலை ரூ. 1-00

மேற்கண்ட புத்தகங்களில் ஏதேனும் விரும்புவர்கள் புத்தகம் ஒன்றிற்கு 35 பைசா தபால் தலை விலையுடன் அனுப்பவும். 5 புத்தகங்களையும் ஆர்டர் செய்பவர்களுக்குத் தபால் செலவு இலவசம்

**கிரி டிரேடிங் ஏஜென்ஸி**

**மோடி நிவாஸ், பண்டார்கர் ரோடு, (போஸ்ட் ஆபீஸ் எதிரில்)**
**மாதுங்கா, பம்பாய்-19**

**10, திரு கபாலீஸ்வரர் சன்னதி தெரு,**
**மைலாப்பூர், சென்னை-600004**

வியாபாரிகளுக்குத் தக்க கழிவு உண்டு.



# Duckback®

## மழை உடைகளில் தலைமை வகிப்பது

முன் நிற்கும் பாதுகாப்பு உடை.
தரத்திலும் பாணியிலும்
மேன்மை மிகுந்தது.
பல வேறான அளவுகளிலும்
வண்ணங்களிலும்
கிடைக்கிறது.

பெங்கால் வாட்டர் ப்ரூஃப் ஒர்க்ஸ் (1940) லிமிடெட்
கல்கத்தா • பம்பாய் • மதராஸ்

# ஹல்லோ! இளையராஜா பேசறேன்!

வெள்ளிக்கிழமை நவம்பர் 9உ. இரவு 8-45 மணியிலிருந்து 10-30 மணி வரை சலிக்காது ஃபோனில் கேள்விகளுக்குப் பதிலளித்துக் கொண்டிருந்தார் இளையராஜா. வாசகர்கள் அவரை ஒரு கப் காப்பி சாப்பிடக் கூட விடவில்லை! பலபேர் இளைய ராஜாவுடன் பேசுகிறோம் என்ற பரபரப்பிலேயே கேள்வியை மறந்துவிட்டனர். வாழ்த்துக்களும் வணக்கங்களும்தான் அதிகமாயிருந்தன. இனி சில சிறப்பான கேள்வி பதில்களைப் பார்ப்போமா?

**ஏ. வி. சுந்தரம், பொள்ளாச்சி**
**ஒரு பாட்டை கம்போஸ் பண்றதுக்கு முன்னாடி நீங்க யாரை நினைக்கிறீங்க?**

மெல்லிசைக் குழு நடத்திக் கொண்டிருக்கும்போது முதலில் எனது தமையனார் பாவலர் வரதராஜனை நினைத்துவிட்டுத்தான் தொடங்குவேன். திரைப் படத்தின் பாடலை கம்போஸ் செய்வதற்கு முன்பு படத்தில் பாடல் இடம்பெறப்போகும் கட்டம் — சூழ்நிலைதான் மனத்தில் இருக்கும்.

**ராஜு, சென்னை-35.**
**நீங்கள் இசையமைத்ததிலேயே உங்களுக்குப் பிடித்த பாட்டு எது?**

சமீபத்திலே சுத்தமான ஹம்சத்வனி ராகத்திலே அமைந்த ''மயிலே, மயிலே'' என்ற பாட்டு எனக்குப் பிடித்தது. படம் ''கடவுள் அமைத்த மேடை''.

**சீனிவாசன், சென்னை-18.**
**நீங்கள் புதுமையாக இசையமைக்கிறீர்கள் இல்லையா? எப்படி?**

என்னால் முடிந்தவரை புதுமையாக இசை அமைத்துக் கொண்டுதான் வருகிறேன். எப்படி என்று விரிவாகச் சொல்ல ஆரம்பித்தால் உங்களைப் போன்ற பலருக்கு டெலிபோனில் பதில் சொல்ல முடியாமல் போய்விடுமே!

**இளஞ்செழியன், சென்னை-6.**
**பழைய மெட்டுக்களை நீங்கள் காப்பியடிப்பதாகக் கூறுவதற்கு உங்கள் பதில்?**

சங்கீதத்தில் புதுமையே ஒன்னும் இடையாதுங்க. சப்தஸ்வரங்கள் தான். அன்றும் சரி, இன்றும் சரி, இதில் யாருமே புதுமை செய்ய முடியாது.

**ராமநாதன், கோவில்பட்டி.**
**பாட்டு வர வேண்டிய நாலு இடங்களில் ஒரு இடத்தை நீங்களே தேர்ந்தெடுத்துப் பாட்டைப் போட்டால் சிறப்பாக அமையும் என்று நீங்களே கூறியிருக்கிறீர்கள் இல்லையா?**

ஆமாம். என்னால் சிறப்பாகச் செய்ய முடியும் என்று நான் நம்புகிறேன்.

**சங்கரன், கோவை**
**கம்பன் வீட்டுக் கட்டுத் தறியும் கவிபாடும். இளையராஜா வீட்டு இட்லி பானையும் இசையமைக்குமா?**

ஆமாம். என் மனைவிகூட இட்டிலிப்பானை விசிலடிக்கிறது என்று கூறுகிறாள்.

**சேகர், கோவை.**
**''ஆப் கீ கஸம்'' படத்தின் பாடலைப் போலவே இருக்கிறதே உங்கள் ''காற்றினிலே வரும் கீதம்'' படத்தின் பாடலும்? அது எப்படி நீங்கள்தான் முதன் முதல் செய்தீர்கள் என்று சொந்தம் கொண்டாட முடியும்?**

படமும் பாடலும் வெளிவந்த நேரம்தான் உங்களுக்குத் தெரியுமே தவிர, இசை அமைத்து ரிகார்ட் செய்த நேரம் உங்களுக்குத் தெரியாது இல்லையா? அந்த விதத்தில் நான் முதலில் நிற்கிறேன்.

**கே. ராமையா, பொள்ளாச்சி.**
**கணித மேதை ராமானுஜத்திற்கு நாமக்கல் அனுமன் சக்தி கொடுத்ததாகச் சொல்கிறார்கள். அதைப் போல் உங்களுக்கு?**

அவனன்றி ஓரணுவும் அசையாது.

**பி. ஆர். நரசிம்மன், திருநெல்வேலி.**
**பாவலர் பிரதர்ஸ் என்ற குழுவை என்று எப்பொழுது எங்கு ஆரம்பித்தீர்கள்?**

1958—59ம் ஆண்டு மதுரையில் முதல் கச்சேரி நடந்தது.

**சோமு, விருத்தாசலம்.**
**நான் உங்க ரசிகன். நான் கேக்கற கேள்விக்கு மறுக்காம பதில் சொல்லணும். நான் ஒரு ரேஸ் பிரியன். உங்க வாயால ஒரு நம்பர் சொல்லுங்க?**

நம்பர் 6



முத்து, தூத்துக்குடி.
நீங்க கடைசியாக இசையமைத்து முடித்த படம் எது?

''நதியைத் தேடிவந்த கடல்.''

ராஜாராம், சென்னை.
நீங்கள் கதாநாயகனாக நடிக்கிற படத்துக்கு நான் இசையமைத்தால்?

ரொம்ப நல்லாயிருக்கும் — படம் மட்டும்.

செல்வகுமார், சென்னை-86.
கிடார் ஒலி சிறந்ததா? இல்லை வீணை ஒலி உயர்ந்ததா?

ஓசைதான் முக்கியமே தவிர கருவிகள் அல்ல.

ரவி, சென்னை-88.
உங்கள் முன்னேற்றத்துக்கு யார் காரணம்?

நான் முன்னேறிவிட்டதாக யார் உங்களிடம் சொன்னது?

விஜயலக்ஷ்மி நந்தகோபால், ஈரோடு.
இதுவரை மேடையிலோ திரையிலோ வேறெந்த நிகழ்ச்சிகளிலோ பாடாத, பாத்ரூமில் மட்டுமே பாடிப் பழகிய ஓர் இனிய குரல் உங்கள் முன் வந்தால், சந்தர்ப்பம் அளித்து சினிமாவில் பாட வைப்பீர்களா?

காத்துக் கொண்டிருக்கிறேன்; காணவில்லையே!

ஜேனி, மீனம்பாக்கம்.
இளமை காலத்தில் இளையராஜா, முதுமைக் காலத்தில் முதிய ராஜாவாகி விடுவீர்களா?

எனக்கு வயது என்ன ஆனாலும் என் இசை இளமையோடு இருக்க வேண்டும் என்பது தான் என் ஆசை.

சேகர், கோயமுத்தூர்.
உங்கள் இசையில் எம். எஸ். விஸ்வநாதனோ அல்லது அவரது இசையில் நீங்களோ பாடியிருக்கிறீர்களா?

நான் முயன்றேன். அவருக்கு நேரமில்லாமல் போய்விட்டது. அவர் இசையில் நான் பாடுவதைப் பற்றி அவர்தான் சொல்ல வேண்டும்.

நாராயணன், மன்னாடி.
உங்கள் வாழ்க்கையில் எதை அதிர்ஷ்டமாக நினைக்கிறீர்கள்?

நான் மியூஸிக் டைரக்டராக இருக்கிறதே ஓர் அதிருஷ்டம்தானே!

ஆர். லக்ஷ்மி, சென்னை-75.
அன்னக்கிளி வந்த புதிதில் உங்களுக்கு இருந்த மன நிலையும் இன்றுள்ள நிலையும் என்ன?

அன்னக்கிளி வந்த புதிதில் ஆர்வத்துடன் தியேட்டருக்குச் சென்று மக்கள் எப்படி ரசிக்கிறார்கள் என்று கேட்டதுண்டு. அதே போல் ஆர்வம் இப்பொழுதும் இருக்கிறது. ஆனால் நேரம்தான் இல்லை.

சோமசுந்தரம், சென்னை-17.
உங்களுடைய மாஸ்டர் பீஸாக ஒரு முழு ரிகார்ட் இசையமைத்து அளிக்கக் கூடாதா?

விருப்பம்தான்; நேரமும் காலமும் ஒத்துழைக்க வேண்டுமே.

சந்திரசேகரன், சென்னை.
ஆர். டி. பர்மனை விட நீங்கள் சிறந்த இசையமைப்பாளர் என்று நான் நினைக்கிறேன், நீங்கள்?

நீங்கள் அப்படிச் சொன்னால் நன்றி.

வி. வைத்தியநாதன், திருச்சி.
நீங்கள் ஏன் ஒரு படத்தை இயக்கக் கூடாது?

எப்படி இயக்கக் கூடாது என்பதற்கு உதாரணமாகத் திகழவா?

சுப்ரமண்யம், சென்னை-17.
இப்படி 'ரசிகர்களுடன் பேசும்பொழுது எப்படி இருக்கிறது?

ரம்யமான இசையைக் கேட்பது போல் இருக்கிறது.

நாகராஜன், சென்னை-5.
எம். எஸ். விஸ்வநாதனைப் பற்றி என்ன நினைக்கிறீர்கள்?

இந்தியாவின் இசைமேதைகளுள் ஒருவர்.

ஆர். சாவித்ரி, சென்னை-77.
திரை இசையில் நீங்கள் புரட்சி செய்து விட்டீர்கள் இல்லையா?

நான் அப்படி நினைக்கவில்லை. இன்னும் செய்ய வேண்டியது எவ்வளவோ இருக்கிறது.

ஆர். சசிகலா, ஊட்டி.
உங்க சொந்தக் குரலில் நீங்கள் பாடியவற்றுள் உங்களுக்குப் பிடித்த பாட்டு எது?

வெளிவரப்போகும் பாரதி ராஜாவின் ''கல்லுக்குள் ஈரம்'' என்ற படத்தில் வரும் ''சிறு பொன்மணி அசையும்'' என்ற பாடல் தான்.

வசந்தி, சென்னை-17.
சிறப்பாக நீங்கள் ஒரு பாடலுக்கு இசையமைக்கிறீர்கள். ஆனால் அந்தப் பாடலுக்கான காட்சி சரியாகப் படமாக்கப்படவில்லை என்றால் உங்கள் பாடலையே கெடுத்து விட்டது போல் உள்ளதென்றால் நீங்கள் என்ன நினைப்பீர்கள்?

பெற்றெடுத்த குழந்தையை அரக்கனிடம் பறிகொடுக்க அவன் அதைக் கொல்வதுபோல் இருக்கும்.

கோவிந்தராஜுலு, கோவை.
வாழ்க்கையில் புகழின் உச்சியிலிருக்கிறீர்கள். பழைய வாழ்க்கையை நீங்கள் நினைவு படுத்திப் பார்ப்பீர்களா?

மறந்தால்தானே நினைப்பதற்கு?

மேலட்டையில் இளையராஜா.
வண்ணப்படம்: உத்ரா.

சிறந்த கேள்வியைக் கேட்டவர்:

**வசந்தி,**
**51, பகலுல்லா ரோடு,**
**தி. நகர், சென்னை-17.**
**ஒரு எல். பி. ரிகார்டு பரிசு பெறுகிறார்.**




# தரம் உயரட்டும்; நிலைத்து நிற்கட்டும்!

உரையாடலில் பங்குபெறுவோர்:

**திரு தீபம். நா. பார்த்தசாரதி**
**திரு கங்கை அமரன்**

**உரையாடல் நா. பாவின் இல்லத்தில் நடைபெறுகிறது**

கங்கை அமரன்: வணக்கம்,... தினமணி கதிர் பத்திரிகையின் ஆசிரியர் பொறுப்பைத் தாங்கள் ஏற்றுள்ளதாக அறிகிறேன். எனது மனமார்ந்த வாழ்த்துக்கள்....

நா. பார்த்தசாரதி: நன்றி... சமீப காலத்தில் உங்களைப் பற்றி நிறையக் கேள்விப்படுகிறேன்... நேரில் சந்திக்க முடிந்ததற்கு மகிழ்ச்சி... திரை இசை பற்றிய உரையாடல் என்று சொன்னார்கள். சமீப காலத்தில் தமிழ் சினிமா உலகில் குறிப்பிட்டுச் சொல்லும் படியாகப் புதுமைகள் ஒன்றும் நடந்து இருப்பதாக எனக்குப் படவில்லை...

கங்கை: அப்படிச் சொல்லிவிட முடியாது. பெருவாரியான மக்கள் தற்போது திரை இசைக்கு முக்கியத்வம் கொடுக்கிறார்கள். பெரும்பாலான ஹிந்திப் படங்கள் பெரு வெற்றி பெறுவதற்கு இசை காரணமாக அமைவதை நாம் காண்பதுண்டு.... தற்போது தமிழ்ப்பட உலகிலும் இந்நிலை வளர்ந்து வருவதைக் காணமுடிகிறது...

நா. பா: இசை என்று சொல்லும் போதுதான் பிரச்னை எழுகிறது... பாடல்கள் என்று வேண்டுமானாலும் சொல்லலாம்...

கங்கை: இசை என்று குறிப்பிடுவதில் தவறு இல்லை என்று நினைக்கிறேன்... படத்தில் வரும் பாடல்கள் மட்டுமில்லாமல் ரீ ரிகார்டிங்கிலிருந்து எல்லாவற்றையும் தற்போது ரசிகர்கள் கவனித்து, சிறப்பாக இருப்பின் பாராட்டுகிறார்கள்... 'இந்தப் படத்தில் இந்தக் காட்சியில் ஒலிப்பதிவும் இசையும் நன்றாக இருந்தன' என்று கூட ரசிகர்களிடமிருந்து கடிதங்கள் வருகின்றன..

நா. பா: இருக்கலாம்.. ஆனால் இசை என்று கூறும்போது அதில் பல அம்சங்களும் ஒருங்கிணைந்து இருக்கவேண்டும் என்பது என் கருத்து. நல்ல பாட்டு, இனிமையான ராகம், இனிமையான குரல், நல்ல துணை வாத்யங்கள் போன்று பல அம்சங்களும் இணைந்து கேட்போர் உள்ளங்களில் ஒரு சிலிர்ப்பை ஏற்படுத்துவதாக அமைய வேண்டும் சிறப்பான இசை! மீரா பஜன் போலவோ, தியாகராஜ பாகவதர் பாடியது போன்றோ காலத்தாலும் அழியாமல் நிலைத்து நிற்கும் இசையைத் தற்போதைய படங்களில் நாம் கேட்க முடிவதில்லையே...

கங்கை: தியாகராஜ பாகவதர் பாடிய பாடல்கள் மாதிரி தரமான பழைய பாடல்கள் எங்களுக்கு முன்னோடி போன்றவைதாம்... ஆனாலும் தற்போதும் சிறப்பான இசை கொண்ட பாடல்கள் வரத்தான் செய்கின்றன...

நா. பா: 'எல்லாம் இன்பமயம்' என்று ஒரு பாட்டு. நீங்களும் கேட்டிருப்பீர்கள்... கர்னாடக சங்கீத வழியில் மிகச் சிறப்பாக இசையமைக்கப்பட்ட திரைப்பாடல் அது... அப்பாட்டை இப்போது கேட்டாலுங்கூட நான் மயங்கி அங்கேயே நின்று கேட்பதுண்டு... இசை என்றால் அம்மாதிரி இருக்கவேண்டும்... முன்பெல்லாம் திரையுலகில் ஏழெட்டு இசையமைப்பாளர்கள், பாடலாசிரியர்கள் மட்டுமே

Monopoly செய்து கொண்டிருந்தனர்: அந்நிலையிலேயே பல சிறப்பான இசை கொண்ட பாடல்கள் வந்துள்ளன. 'திறமை இருந்தால் முன்னுக்கு வரமுடியும் என்கிற நம்பிக்கை உள்ள தற்போதைய சூழ்நிலையில் உங்களைப் போன்ற இளைஞர்கள் திறமையுடன் செயல்பட்டு, ரசனையில் உயர்வான பாடல்களை ஏன் தயாரிக்கக் கூடாது?...

கங்கை: தற்போது, கிராமியச் சூழ்நிலைப் படங்களுக்குக் கிராமிய மணம் கமழும் இசையுடன் பாடல்கள் அமைக்கிறோம். இம்முயற்சி ரியலிஸ்டிக்காகவும் புதுமையாகவும் உள்ளதை நீங்கள் ஒப்புக்கொள்ள வேண்டும்...

நா. பா: அம்மாதிரி நாட்டு மணம் கமழும் பாடல்களை நானும் வரவேற்கிறேன்...; அதற்காக எனது பாராட்டுக்களும் கூட.... ஆனால் 'ஓரம் போ..' மாதிரி வெறும் வசன நடையை இசையாக எப்படி ஏற்றுக்கொள்ள முடியும்?

கங்கை: 'ஓரம் போ' பாடல் 'மாடர்ன் ஆர்ட்' மாதிரி ஒரு புது முயற்சி... வசனத்தைத்தான் இசையுடன் பாடலாக அமைத்துள்ளேன் என்று ஒப்புக் கொள்கிறேன்... இது போன்ற புதுமையான இசையை மக்கள் வரவேற்கிறார்களே...

நா. பா: புதுமை என்று வேண்டுமானால் சொல்லுங்கள்! இசை என்று கூறுவது சரியாகாது. மக்கள் பாராட்டுகிறார்கள் என்பதனால் மட்டுமே அவை உயர்வானதாக ஆகிவிடாது. அதே போல் அம்மாதிரியானவற்றைத் தொடர்ந்து அமைக்க வேண்டும் என்பதும் சரியல்ல. கள்ளச் சாராயத்தைக் கூடத்தான் நிறைய மக்கள் விரும்புகிறார்கள்... மக்கள் விரும்புவதால் மட்டுமே அது உயர்வாகி விடுமா என்ன?

கங்கை: புதுமை என்பது திரை இசையில் மட்டுமல்ல. எல்லாத் துறைகளிலும் தான் வந்துள்ளது: ஏன் உங்கள் எழுத்துத்துறையையே எடுத்துக் கொள்ளுங்களேன். எழுதும் விதத்தில் முன்பு இருந்ததற்கும் தற்போதைக்கும் நிறைய மாற்றங்கள் நிகழ்ந்துள்ளன. புதிய பாணியை மக்கள் வரவேற்கிறார்களே...

நா. பா: எழுத்துலகில் புதிய பாணி வந்துள்ளதை நானும் ஒப்புக் கொள்கிறேன். முன்பு நேரடியாக நீதியைப் போதிப்பது போன்று கதைகள் எழுதப்பட்டன. தற்போது சிக்கனமான சொற்பிரயோகம், மனத்தில் தைப்பது போன்று கருத்தைச் சொல்லும் விதம் போன்று தமிழ் எழுத்து உலகிலும் புதுமைப் பாணி வந்துள்ளது. எந்தத் துறையானாலும் சரி, புதுமை என்பதால் மட்டுமே எது ஒன்றும் உயர்வானதாக ஆகிவிடாது. மக்களது ரசனையை உயர்த்துவதாக உள்ளதைத்தான் சிறப்பானதாக ஏற்றுக்கொள்ள முடியும்... என்னுடைய ஆதங்கம் என்னவென்றால் 'ஓரம் போ' பாடலுக்காக ஒரு போராட்டம் அவசியம் தானா?

கங்கை: நாங்கள் போராட்டம் நிகழ்த்தப் போவதாகச் சொன்னது 'ஓரம்போ' பாடலுக்காக மட்டுமே அல்ல! ஒரு குறிப்பிட்ட பாட்டை ஒலிபரப்ப' இசைவதும், இன்னொரு பாட்டை ஒலி பரப்பத் தடை விதிப்பதிலும் வானொலியில் சீரான கொள்கை இல்லை என்பதால் அதை எதிர்த்துத் தான் போராட்டம் நடத்த முடிவு செய்தோம். முன்பு தியாகராஜ பாகவதரின் 'மன்மதலீலையை வென்றார் உண்டோ' என்ற பாட்டில் 'மன்மதலீலை' என்ற வார்த்தை ஆபாசமாக இருக்கிறது என்று தடை செய்த வானொலியினர் தற்போது 'மன்மதலீலை என்ற படத்தில் வரும் பாட்டு' என்று அறிவிப்பு செய்கிறார்கள். இம்மாதிரியான முரண்பாடுகளை எதிர்த்துத் தான் குரல் எழுப்பினோம்...

நா. பா: 'மன்மத லீலை' என்ற வார்த்தை ஆபாசம் என்றால் புராண இதிகாசங்களில் கிருஷ்ணலீலை, மதனலீலை, ராசலீலை என வரும் இடங்களைக் கூட ஆபாசம் என்று முத்திரை குத்திவிடும் அபாயம் நேரிடலாம். வார்த்தைகளில் ஒன்றுமில்லை, அர்த்தம் தான் சரியாயிருக்கவேண்டும்.... 'ஓரம் போ' பாட்டை வானொலியினர் தடை செய்ததையும் நான் ஆதரிக்கவில்லை. அதே சமயம் உங்கள் சார்பாகவும் நான் பேச வில்லை. வானொலியினர் 'ஓரம் போவை' விடவும் மோசமான அர்த்தமுள்ள சில பழைய சினிமாப்பாடல்களையும் தடை செய்துவிட்டு அப்புறம் தான் ஓரம் போவைத்தடை செய்யவேண்டும். இந்தப் போராட்டத்தால்தான் 'ஓரம் போ' பாட்டே பிரபலமாயிற்றே என்பது என் எண்ணம். திறமை உள்ள நீங்கள் இந்தச் 'சீப்'பான பாட்டினால் தான் பிரபலம் ஆவது எனக்குச் சரியாகப் படவில்லை...

## இசை மாறிய கலைஞர்கள்

பிரபல பின்னணிப் பாடகர்களும் இசையமைப்பாளர்களும் ஆசைக்கு வேறு மொழிப் பாடல்களைப் பாடியும், இசை அமைத்தும் பார்த்ததுண்டு. இதோ சில சாம்பிள்:

லதா மங்கேஷ்கர் இரண்டே இரண்டு தமிழ்ப் படங்களில் தமிழில் பாடியிருக்கிறார்! படம்: சந்தானம், வானரதம்.

P. B. ஸ்ரீனிவாஸ் இரண்டு இந்திப் படங்களில் பாடியிருக்கிறார். "மை பி லட்கி ஹூ, இந்தி வீர பாண்டிய கட்டபொம்மன்!"

பி. சுசீலா இந்தியில் 'சுவர்ண சுந்தரி' என்கிற (மணாளனே மங்கையின் பாக்கியம்) ஒரே படத்தில் பாடியதோடு சரி.

விஸ்வநாதன் - ராமமூர்த்தி இந்தி 'நயா ஆத்மி' என்கிற ஒரே படத்துக்கு இசை அமைத்ததோடு சரி.

இந்தி இசை அமைப்பாளர் 'வஞ்சிக்கோட்டை வாலிபன்' படத்துக்கு இசை அமைத்தார்.

— சம்பத் குமாரி

கங்கை: நான் எழுதிய மச்சானைப் பார்த்தீங்களா...: வெத்தலை வெத்தலை வெத்தலையோ... அந்தப்புரத்தில் ஒரு மகராணி போன்ற பாடல்களும் பெரு வரவேற்பைப் பெற்றுள்ளனவே..!

நா. பா: மச்சானைப் பார்த்தீங்களா, வெத்தலை வெத்தலை வெத்தலையோ ஆகியவை கிராமிய மணம் கமழும் நல்ல பாடல்கள் தாம்... நான் விரும்புவது சிறப்பான பாடல்கள் மூலமே நீங்கள் புகழ்பெற வேண்டும்...

கங்கை: திரை இசைத் துறையில் சராசரி ரசிகர்களின் ரசனையைக்கொண்டு தயாரிப்பாளர்கள் விருப்பப்படி இரண்டு பாடல்கள் அமைத்தாலும், இத்துறையில் எங்களது சிறப்பை நிலை நாட்டும்படியாக இரண்டு பாடல்களை சாஸ்திரீய சங்கீத அடிப்படையில் நாங்களும் அமைக்கத்தான் செய்கிறோம்.

நா. பா: சமீப காலத்தில் திரைப்படங்களின் நடுவே நாம் ஒரு காட்சியைப் பார்க்கிறோம்.. பாடல் வந்ததும் பலரும் வெளியே போய் பீடி, சிகரெட் பிடிக்க ஆரம்பித்து விடுகின்றனர்... இந்நிலை வராமல் உங்களைப் போன்றோர் கவனித்துக்கொள்ள வேண்டும்...

கங்கை: படத்தின் காட்சியைத் தவிர்த்துப் பாடலை மட்டும் கேட்கலாம் என்று அம்மாதிரிப் போவோரும் இருக்கத்தான் செய்கிறார்கள்.

நா. பா.: ஒப்புக்கொள்கிறேன். அப்படியானால் பாடல் படத்தின் காட்சிக்குத் தொடர்பில்லாதது என்றாகிவிடவில்லையா? (இருவரும் நகைக்கின்றனர்) Sound of music போன்று இசையை மட்டுமே பிரதானமாகக் கொண்டு தமிழிலும் படங்கள் வெளிவரலாமே?

அமரன்: முன்பு 'சாந்தி நிலையம்' வந்தது. சமீபத்தில் பாலசந்தர் 'நினைத்தாலே இனிக்கும்' படம் எடுத்தார். பாரதிராஜா கூட எடுப்பதாக உள்ளார். இம்மாதிரிப் படங்கள் வசூலில் எந்த அளவுக்கு வெற்றியாக அமையும் என்கிற தயக்கம்தான் இம்முயற்சிக்குத் தடையாக உள்ளது.

நா. பா.: வெற்றியடையும் காலம் வரும். மக்களின் ரசனை மேலும் மேலும் வளர்ந்தால் இந்நிலை சாத்தியமே. ஆனால் பல தயாரிப்பாளர்கள் அப்படியெல்லாம் வளர விட்டு விடுவதில்லை.

அமரன்: மக்களின் ரசனையை உயர்த்த வேண்டுமென்று ஆக்கபூர்வமான எண்ணம் எங்களுக்கும் இல்லாமலில்லை. திரை இசை மேதை ஜி. ராமநாதன் முன்பு புன்னாகவராளி ராகத்தில் ஒரு பாடல் அமைத்திருந்தார். நெடுநாட்களாக அந்த ராகத்தில் ஒரு பாடலை எந்தப் படத்துக்காவது அமைக்கவேண்டும் என்று எனக்கு ஆவல். காட்சி சரியாக அமையவில்லை. சமீபத்தில் பாம்பாட்டி சம்பந்தப்பட்ட ஒரு காட்சி அமைந்தது. அந்த ராகத்தில் அமைத்தேன். 'பண்ணைபுரத்து பாண்டவர்கள்' என்று இன்னொரு படம் வர இருக்கிறது. அப்படத்துக்காக ஒரு பாடலுக்கு இசை அமைத்துள்ளேன். எனக்கே ஆத்ம திருப்தி தருவதாக அமைந்துள்ளது. உங்களுக்கு அப்பாடலைப் போட்டுக் காட்ட வேண்டி டேப் செய்து எடுத்து வந்துள்ளேன்.

## விலை ஒரு ரூபாய்!

தமிழ்ப் படப் பாடல்களை விளம்பரப்படுத்துவதே சிலோன் ரேடியோதான். அதன் விலை ஒரு ரூபாய்தான்! வியப்பாக இருக்கிறதா? பிரிட்டிஷ்காரர்கள் சிலோனை விட்டுப் போகையில் அதை அழித்துவிட்டு முக்கியமான ஒலிபரப்பு சாதனங்களையெல்லாம் எடுத்துப் போக நினைத்தனர். ஆனால் அதற்காகும் செலவில் புதிதாக லண்டனில் ஒரு ஸ்டேஷனையே கட்டலாம் போலிருந்தது. எனவே இலங்கை அரசுக்கு விலைக்கு விற்றுவிட்டார்கள். இலங்கை அரசு கொடுத்த விலைதான் ஒரு ரூபாய்! உலகிலேயே இரண்டாவது சிறந்த ரேடியோ ஸ்டேஷன் இது. இதை ஏழு நாடுகளில் கேட்கமுடிகிறது.

-ரவிராஜ்

நா. பா.: மெத்த நன்றி. போடுங்களேன் கேட்கலாம். (டேப் ஓடுகிறது:

தூங்காத நியாயங்களே
உமக்கேனோ இன்று
மீளாத தூக்கங்களே
தர்மங்களெல்லாம் ஊமையாகிப்
போனதோ?

?..பாடல் தொடர்ந்து முடிகிறது. ஆழ்ந்த லயிப்புடன் நா. பா. கேட்கிறார்.)

நா. பா.: மிகவும் சிறப்பாக உள்ளது. இம்மாதிரிக் கவிதை நயமுள்ள பாடல்கள் மூலமே தங்களுக்குப் புகழ் கிடைக்க வேண்டும் என்று நான் விரும்புகிறேன். இப்பாடலை எழுதியது யார்?

கங்கை: கவிஞர் புலமைப்பித்தன்.

நா. பா.: இப்பாடலின் வரிகள் ஒரு நல்ல கவிஞரின் வரிகள் என்பதைத் தெளிவுற வெளிப்படுத்தும் வகையில் உள்ளன. கண்ணதாசன் கவித்வத்துடன் எழுதுகிறார். இல்லாமலும் எழுதுகிறார். பொதுவாகப் பார்க்கப்போனால் பெரும்பாலான பாடல்கள் ஓரளவு ஆபாசம் இரட்டை அர்த்தம் மட்டும் கொண்டு, கவித்வம் சிறிதுமில்லாமல் உள்ளன. 'இழுக்குடைய பாட்டுக்கும் இசை நன்றாக இருக்கும்' என்பது போல் அவை மியூசிக்கால் மட்டுமே பெயர் பெறுவதையும் காண முடிகிறது. கங்கை அமரன் அவர்களே' உங்கள் பாடல்களைக் கேட்கும் லட்சக் கணக்கான ரசிகர்கள் என்ன காரணம் என்று தெரியாமல் உங்களைப் புகழ்வதை விட நீங்கள் ஒரு நல்ல கவிஞர் என்ற பெயரை நிலைநாட்டும் வண்ணம் புகழ்பெற வேண்டும் என்பதே என் அவா!

கங்கை: நன்றி.

உரையாடல் தொகுப்பு: **நாயகன்**
புகைப்படம்: **உத்ரா**




'ஜனதா பதவிக்கு வந்தால் ஜகஜீவன்ராம் தான் பிரதமர்' என்று எல்லா ஜனதா தலைவர்களும் கூறி இருக்கிறார்கள்.









# கல்கி

1979 நவம்பர் 18

சித்தார்த்தி கார்த்திகை 2

மலர்: 38 இதழ்: 16


தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற எங்கள் தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்

## கலைஞர் வழங்கிய லைசென்ஸ்!

அதிகார போதை தலைக்கேறினால், சித்தம் கலங்க மனிதர்கள் எப்படியெல்லாம் நடந்து கொள்வார்கள் என்பதை கிருஷ்ணசாமி நாயுடு அறிக்கை தெளிவாக்குகிறது.

ஜனவரி 72 முதல் மே 75 வரை தி. மு. க. அரசாங்கத்தில் நடந்த அதிகார துஷ்பிரயோகங்கள் பற்றி விசாரணை நடத்திய அவர், இடைக்கால அறிக்கை சமர்ப்பித்திருக்கிறார். அது இரு தி.மு.க. அமைச்சர்களின் தன்னலப் போக்கையும் ஆணவ நடத்தையையும் தெளிவாக்குகிறது. தி. மு. க. ஆட்சி குறித்து மக்கள் ஏற்கெனவே கற்றுக் கொண்ட பாடம்தான் என்றாலும் அறிக்கை விளக்க உரை வழங்கி, மிச்சம் மீதி இருக்கக் கூடிய சந்தேகங்களையும் போக்குகிறது.

தொழிலதிபர் பி. வி. பி. நாயுடு ராணிப் பேட்டையில் ஒரு டிராக்டர் தொழிலகம் தொடங்க முன் வந்தார். இதனை மத்திய அரசுக்கு மாநில அரசு சிபாரிசு செய்தது. அப்புறம் அமைச்சர் மாதவன் தமது திருவிளையாடல்களைத் தொடங்கினார். கட்சிக்கு நன்கொடை என்ற கர்ண கடூரப் பல்லவியைப் பாடினார். தாம் குறிப்பிடுகிறவரைத்தான் தொழிலகத்தில் நிர்வாக இயக்குனராகப் போட வேண்டும் என்று நிபந்தனை விதித்தார். இதற்கெல்லாம் நாயுடு மசியாமல் போகவே, கோபம் கொண்டார் மாதவன். மத்திய அரசுக்கு முதலில் செய்திருந்த சிபாரிசைத் தமிழக அரசு வாபஸ் பெற்றுக் கொண்டு விட்டது!

நஷ்டம் நாயுடுவுக்கு மட்டுமா? தமிழ்நாடு அல்லவா ஒரு முக்கியமான தொழிலகத்தை இழந்துவிட்டது? எத்தனை தமிழர் வேலை வாய்ப்பு இழந்தனர்.

மாதவனின் திருவிளையாடலை அடுத்து, கண்ணப்பனின் லீலைகள் பற்றியும் கிருஷ்ணசாமி நாயுடு கமிஷன் அறிக்கையில் காண்கிறோம்.

அறநிலையத்துறை அமைச்சராக இருந்தவர் கோவைக்குத் தமது காரியதரிசிகள், சிப்பந்திகள் புடைசூழச் சென்று தங்கியிருந்த போது ஏற்பட்ட செலவுகளை யெல்லாம் மருதமலை முருகன் கோயில் கணக்கில் எழுதச் சொன்னார். கோயில் நிர்வாக அதிகாரி ராமசுவாமி மறுத்தபோது அவரையும் அவருக்குப் பக்கபலமாக நின்ற வேறு ஐவரையும் பழிவாங்கத் தீர்மானித்தார் கண்ணப்பன். அவர்களைப் பதவி நீக்கம் செய்ய அவர்கள் மீது 'கேஸ்களை' ஜோடிக்கச் செய்தார். இந்தப் பொய்யான புகார்கள் மீது அவர்களைத் தண்டித்து அனுப்பினார். மேலும் ஏராளமான கோயில் செல்வத்தைக் கட்சி நலனுக்கும் கட்சி ஆதரவாளர்கள் பைகளை நிரப்புவதற்கும் பயன்படுத்திக் கொண்டார்.

இவற்றை யெல்லாம் விவரமாகத் தமது அறிக்கையில் கொடுத்துள்ள கிருஷ்ணசாமி நாயுடு, ''கண்ணப்பன் போன்ற ஒருவரைத் தமிழ் நாட்டின் கோயில்களையும் மடங்களையும் நிர்வகிக்க அமைச்சராகத் தேர்ந்தெடுத்தது பரிதாபத்துக்குரியது'' என்றும் கூறியுள்ளார்.

இப்படிப்பட்டவர்களைத் தேர்ந்தெடுத்துத் தமது அமைச்சரவையில் சேர்த்துக் கொண்டதுடன் இப்படியெல்லாம் அவர்கள் நடந்து கொள்ள லைசென்ஸும் வழங்கியவர் டாக்டர் கலைஞர் கருணாநிதி என்றால் அதனை சர்க்காரியா கமிஷன் அறிக்கை மெய்ப்பிக்கும்.

இவர்தான் இன்றைய ஆட்சி மீது சட்டசபையில் அண்மையில் கண்டனத் தீர்மானம் கொண்டு வந்ததுடன், அதற்கு வெளியேயும் செல்லுமிடமெல்லாம் 'ஆட்சியிலே லஞ்சம், ஊழல், அதிகார துஷ்பிரயோகம்' என்று அலறுகிறார்.

தம்மீதுள்ள களங்கத்தைப் போக்கிக் கொள்ளக் கலைஞர் முயலலாம். ஆனால் அது முடியாமல் போகிறதே என்பதற்காக மாற்றான் முகத்தில் கரியைப் பூச நினைத்தால் மக்கள் சிரிக்கத் தொடங்குவார்கள். பிறகு அந்தச் சிரிப்பை இன்று சாது போல் நடிக்கும் ''இந்திரா பாபா''வாலும் நிறுத்த முடியாது!

# நூலைப் போல் சேலைகள்

— பரத் —



அப்புவால் நம்ப முடியவில்லை!

அன்று இரவு கல்லூரியை விட்டு மாலை ஐந்து மணிக்குள் வரவேண்டிய புவனா இரவு ஏழு மணிக்கு வந்தபோது, தொண்டையில் முள் ஒன்று சிக்கிக்கொண்டுவிட்ட சங்கடத்துடன் அந்த விஷயத்தைத் தயங்கித் தயங்கி அவளிடம் கேட்டபோது,—

சிறிது நேரம் மௌனமாய்த் தன்னுடைய கால் கட்டை விரலால் தரையில் அரை வட்டம் போட்டுக் கொண்டிருந்தவள், ''ஆமாம்ப்பா, அவர் என்னுடைய சிநேகிதர். ரொம்ப நல்ல மாதிரி'' என்று சொன்ன போதுகூட அவரால் நம்பத்தான் முடியவில்லை.

அதை மட்டுமா? — இன்னும் எத்தனை விஷயங்களை அவன் நம்ப முடியாமல் தவிக்கிறான்? அவனுடைய மனோகரி அவனுக்காகவே பிறந்து வந்தவளைப் போல் அவனுக்கு வாழ்க்கைப்பட நேர்ந்ததிலிருந்து எத்தனை விஷயங்களை நம்ப முடியாமல் தவித்துப் போயிருக்கிறான்!

அம்மை வடுக்கள் தாளித்திருந்த அவனுடைய கறுப்பு முகத்துக்குச் சற்றும் பொருத்தமில்லாத சிவந்த வழு வழுப்பான மனோகரி வாழ்க்கைத் துணைவியாய் வந்தபோது இந்த ஊரே வியக்கத்தான் செய்தது.

''எலே, அப்பு! நீ ரொம்ப அதிர்ஷ்டக்காரன்டா. எள்ளிலே அட்சதையைக் கலந்த மாதிரி இப்படி ஒரு பெண்டாட்டி உனக்கு எங்கேருந்துடா வாய்ச்சா?'' என்று கிண்டலும் கேலியுமாய் அவனைப் பார்த்து வியப்போடு பரிகசிக்கவும் செய்தது சுற்றமும் நட்பும்.

''ஏன் மனோ உனக்கு நிஜமாகவே என்னைப் புடிச்சிருக்கா? நான் கறுப்பா இருக்கேன்னு உனக்கு வருத்தமே இல்லையா?'' என்று ஏக்கத்துடன் அடிக்கடி கேட்பான் அப்பு.

''நன்னாயிருக்கு! 'கறுப்பே அழகு காந்தலே ருசி'ன்னு உங்களுக்குத் தெரியாதா என்ன?'' என்று தன்னுடைய பதிலையும் ஒரு கேள்வியாய்க் கேட்டுவிட்டுக் கலகலவென்று சிரிப்பாள் மனோ.

அடிக்கடி அவனுடைய அரவணைப்புக்களால் அவளை இறுக்கும்போதெல்லாம் அவனுள் அவனே கேட்டுக் கொள்வான். ''இதெல்லாம் எனக்கா?''

அவளுடைய நெளி நெளியான கூந்தல், பளபளப்பான கண்கள், மெது மெதுப்பான கன்னங்கள், சிரிக்கும்போது அதற்கு இதமாய் மலரும் மூக்கு. எல்லாமே ''எனக்கா? எனக்கா?'' என்று அவனுள் அவனே கேட்டுக் கேட்டுப் பார்த்து மாய்ந்து போவான்.

இதெல்லாம் 'எனக்குத்தான் எனக்குத்தான்' என்று நியாயப்படுத்திக் கொள்வது போல் அவளது ஒவ்வொரு அங்கங்களையும் தொட்டுத் தொட்டுப் பார்த்து மயங்கியும் போவான்.

அவள் வந்த பின்பு அப்புவின் வாழ்க்கையில் ஒரு வசந்தம் வீசத்தான் துவங்கியது. அனல் கக்கும் கோட்டை அடுப்புகளுக்கு முன்னால் வெந்து கொண்டிருப்பவனுக்கும் ஒருசில சுகானுபவங்கள் அமுந்தும் அரவணைப்புக்களாய், உரசும் சுகந்த சுவாசங்களாய், மிருதுவாய் மென்மையாய் அவன் கழுத்திலாடும் பூமாலைகளாய் அவனுக்காகவே காத்திருக்கிறது என்பதை எண்ணும்போது அவனுள் ஓர் உத்வேகம் பொங்கும்.

அந்த உத்வேகத்தின் பயனும் அவன் உழைப்புக்கள் கடுமையாயிற்று. சுற்று வட்டுக் காரியங்களை மட்டும் கவனித்துக் கொண்டிருந்தவன் தன்னுடைய சளியாத உழைப்பால் நல்ல திறமையுள்ள தலைமைச் சமையல்காரனாய்த் திகழ ஆரம்பித்தான். முகூர்த்த மாதங்கள் வந்தால் போதும், 'எங்கேஅந்த அப்பு?' என்று அவனைத் தேடுமளவுக்கு அவனுடைய திறமை அவனைப் பிரபலமாக்கியது.

ஆனால் மனோகரிக்குத்தான் அவனுடைய தொழிலில் திருப்தி இல்லாமல் போயிற்று. ''நேக்கு இந்தக் கரண்டி ஆபீஸ் உத்தியோகம் கொஞ்சம் கூடப் பிடிக்கல்லே. சம்பளம் குறைச்சலாய் இருந்தாலும் பரவா

யில்லை: ஒரு கௌரவமான வேலையாய்ப் பாருங்கோளேன்'' என்று எப்பொழுதாவது சலித்துக் கொள்வாள்.

நாளடைவில் அவனுடைய உழைப்பில் மலர்ந்த காசெல்லாம் மனோகரியின் அழகை மெருகூட்டத் தொடங்கிற்று. அவனுடைய உழைப்பு அலுப்புத் தட்டும்போதெல்லாம் மனோகரியின் அழகு உற்சாகப்படுத்திற்று.

இப்படித் தினம் தினம் சங்கமிக்கும் அவர்களது சந்தோஷங்களுக்கிடையில்தான் அவனுடைய புவனா மலர்ந்தாள். நல்ல வேளையாக அவனைப் போலில்லாமல் புது ரோஜாவின் சிவந்த நிறத்தில் மனோகரியின் வார்ப்பாய் அழகாய் மிளிர்ந்தாள் குழந்தை. கொஞ்சம் கொஞ்சமாய் மனோகரி மீது அவன் வைத்துள்ள ஈடுபாடுகளையும் கொஞ்சல்களையும் தன்வயப்படுத்திக்கொள்ளத் துவங்கினாள் குழந்தை. இப்படி இன்பத் தெப்பமாய் மிதந்து கொண்டிருந்த அப்புவின் வாழ்க்கையில் நங்கூரம் பாய்ச்சிய விஷயமாயிற்று அந்த ரகுவின் வருகை.

''என்ன அப்படிப் பார்த்துண்டு நிக்கறேள்? இது என்னோட அத்தை பிள்ளை. ரகுன்னு பேரு. பெரிய பிஸினெஸ்மேன். நம்ப கல்யாணத்தின்போது சிங்கப்பூர்லே இருந்தான். இப்போ மெட்ராஸுக்கே வந்து விட்டானாம். இதுதான் என்னோட ஆத்துக்காரர்'' என்று அந்த அழகான வாலிபனை அறிமுகம் செய்து வைத்த பின்தான் அவனுக்கு எல்லாம் லேசாய்ப் புரிய ஆரம்பித்தது.

மடிப்பு நாற்காலியில் உட்கார்ந்து கொண்டிருந்தவன் எழுந்து நின்று ''நமஸ்காரம் அத்திம்பேர்'' என்று மரியாதையுடன் தன் இரு கைகளையும் கூப்பியபோது அவனுடைய பவ்வியத்தில் மனம் மகிழ்ந்து போனான் அப்பு.

''ஊ....ஊ... பரவாயில்லை. நீங்க உட்காருங்கோ. அடிக்கடி நம்பாத்துக்கு வாங்கோ'' என்று அவனை உபசாரம் பண்ணினான் அப்பு.

அவன் உபசரிப்பைச் சிரமேற்கொண்டாற் போல அடிக்கடி வர ஆரம்பித்தான் ரகு. அப்பு இருக்கும்போது ஆரம்பித்த அவன் வருகை அவன் இல்லாத சமயங்களிலும் தொடர்ந்தது. அவன் வருகையால் மனோகரி சந்தோஷப்பட்டாள். ஆனால் நாளடைவில் அப்பு சஞ்சலப்பட ஆரம்பித்தான்.

ஒரு நாள் இதை அவன் மனோகரியிடம் சொன்னபொழுது, ''நன்னாயிருக்கே நீங்க சொல்றது. நமக்குச் சொந்தம்னு சொல்லிக்கவே இப்ப ரகு ஒருத்தன்தான் இருக்கான். அவனையும் வரவேண்டாம்னு சொல்லச் சொல்றேளா? பாவம் அவன் நம்ப மேலே எவ்வளவு பிரியமா இருக்கான்?'' என்று அப்புவின் முடிவை வெகு அலட்சியமாய் நிராகரித்தாள் மனோகரி.

அவள் மீது வைத்துவிட்ட பிரேமையின் காரணத்தால் அதைப் பொறுத்துக் கொண்டான் அப்பு. கடைசியில் அவனுடைய பொறுமைக்கு ஒரு பாடமாய், ''நான் ரகுவுடன் வாழ்க்கை நடத்தப் பிரியப்படுகிறேன். என்னை மன்னித்துவிடுங்கள்'' என்று ஒரு துண்டுக் கடிதத்தில் எழுதிவைத்து விட்டு அவனுடைய பள்ளியறையோடு மனசையும் வெறுமையாக்கிவிட்டுப் போனாள் மனோகரி.

கடைசியில் அப்புவுக்கு மிஞ்சியது மனோகரியின் இனிமையான நினைவுகளும் குழந்தை புவனாவும்தான். மனோகரியின் பிரிவால் காய்ந்துபோன அவன் மனத்திற்குத் தெம்பூட்டியது குழந்தை புவனாவின் மழலையும் அவனுடைய விரைவான வளர்த்தியும்தான்.





நண்பர்: ''கதாநாயகன் வில்லனின் குகைக்குள் நுழையும் காட்சியில் நீங்க தந்திருக்கிற பின்னணி இசை பிரமாதம்! அந்தப் பயங்கர இசைக்காகவே இந்தப் படத்துக்கு 'ஏ' சர்டிபிகேட் கிடைச்சிருக்கு. எந்த வாத்தியத்தை உபயோகிச்சீங்க....?''

இசையமைப்பாளர்: ''இந்தப் படத்தின் புரட்யூசரைப் பார்க்க அவர் வீட்டுக்குப் போனபோது தூங்கிக் கொண்டிருந்தார். அவரது குறட்டையொலியை அப்படியே ரிகார்டு செய்து இதில் சேர்த்திட்டேன்...!''

—சி. பூபாலசிங்

அதற்குப் பின் அவனுடைய வாழ்க்கையே ஒரு விரக்தியாகியது. தன்னுடைய சந்தோஷ மலர்ச்சியை வெறுமையாக்கியது தன்னுடைய கறுப்பு முகமும் கரண்டி ஆபீஸ் உத்தியோகமும்தான் என்று உறுதியாக நம்ப ஆரம்பித்தான். அந்தஸ்தில்லாத அவனுடைய தொழிலின் மீது அவனுக்கு வெறுப்புத் தட்டியது.

அந்த உறுதியின் விளைவாய் புவனாவின் வாழ்க்கைக்கு வரப் போகிறவனும் ஒரு சமையல்காரனாய் இருந்துவிடக் கூடாது என்பதில் தீவிரமாய் இருந்தான். அதற்காக அவளை ஆசைப்பட்டபடியெல்லாம் படிக்க வைத்தான்.

அதைத் தொடர்ந்து அவன் எதிர்காலம் அவன் கனவுகளில் பட்டுத் துணியாய் விரியும். அவளுடைய வனப்புக்கேற்ற அழகான வாலிபனை அவன் மனத்தில் படம் வரைந்து பார்த்தான். அவள் படிப்புக்கு ஏற்றவனாய், ஓர் அந்தஸ்துள்ள உத்தியோக புருஷனாய், ஒரு ஏ. ஸி. ரூமில் ரிவால்விங் சேரில் சுழன்று அசைந்தபடி, தன்னுடைய காரியதரிசிக்கு நோட்ஸ் டிக்டேஷன் செய்தபடி, தன் எதிரிலுள்ள டேபிளில் கிணு கிணுக்கும் தொலைபேசியில் சரளமான ஆங்கிலத்தில் சுவையாக உரையாடியபடி கைநிறையச் சம்பாதிக்கும் ஒரு பொறுப்பான அதிகாரியாய் அவனைக் கற்பனையில் பார்த்து மகிழ்ந்து போவான் அப்பு.

இப்படித் தினம் அவளுடைய எதிர்காலத்தைத் தன் கற்பனையில் ஒரு பொற்சித்திரமாய் வரைந்து பார்த்துக் கொண்டிருந்த அப்பு அன்று திடுதிப்பென்று அவளை அந்த ஹிப்பிப் பையனுடன் பார்த்தபோது உண்மையில் நிலைகுலைந்துதான் போனான்.

புவனாவின் மீது அவன் வைத்துவிட்ட அபரிமிதமான வாஞ்சையின் காரணத்தால் அதை நம்பவும் முடியாமல் குழம்பிப்போனான்.

அந்தக் குழப்பத்துடனேயே அன்றைக்கு வீட்டுக்குத் திரும்பியவன் புவனாவிடம் அது பற்றிப் பேச்சைத் துவக்கவும் தயங்கினான். ஆனால் அவனுடைய மனத் தடுமாற்றத்துக்குக் கைலாகு கொடுப்பவள் போல் புவனாவே அப்புவிடம் அது பற்றிப் பேச்சைத் திருப்பினாள்.

அவளுடைய பேச்சின் ஆரம்பத்தில் அவனுடன் தான் பிரியமாய்ப் பழகுவதாக அவள் கூறியபோது அவனுடன் அவளை மானசீகமாக ஒப்பிட்டுப் பார்த்து அந்த அழகுப் பொருத்தத்தில் ஓரளவு திருப்தியடைந்தான் அப்பு.

பிறகு அவனையே தான் மணக்க விரும்புவதாய் அவள் கூறியபோது அவனையும் அறியாமல் அவன் கேட்ட கேள்வி: ''அவனுக்கு என்ன வேலை?''

''அவர் ஒரு பெரிய ஃபைவ் ஸ்டார் ஹோட்டல்லே கேட்டரிங் டெக்னாலஜிஸ்டாக இருக்கார்ப்பா. கைநிறைய சம்பளம். அதோட அவருக்கு என் மேலே உசிரு'' என்று அவள் தயக்கமில்லாமல் தன்னுடைய தீர்க்கமான முடிவைக் கூறினாள்.

அந்த ஆங்கில வார்த்தைக்கு அர்த்தம் புரியாத அப்பு ஒரு நிமிடம் கனவுலகில் திளைத்தான்.

பிரத்தியேக ஏஸி அறையும், இதமாய்ச் சுழலும் ரிவால்விங் சேரும், வழுவழுப்பான மேஜையும், அதில் கிணு கிணுக்கும் தொலைபேசியும் மாறி மாறி அவன் மனக் கண்ணில் மின்னலிட்டன. அந்தக் கனவுகளின் மயக்கத்திலேயே அவன் புவனாவைக் கேட்டான்:

''அப்படின்னா என்ன வேலை?''



''அந்தப் படத்திலே 6 பாட்டுக்களும் 4 கொலைகளும்னு போட்டிருந்தாங்களே எப்படி இருந்துச்சு?''

''10 கொலைகளா இருந்துச்சு!''

வ. தேனப்பன்

# முற்றுப்பெறாத வாழ்த்துக்கள்!



● கல்கி இதழை வாங்கிக்கொண்டு வீட்டுக்கு வந்தவுடன் 'பின்'களை அகற்றி அட்டையைத் தனியாக எடுத்துவிட்டேன். ராமுவின் கைவண்ணத்தில் உருவான வண்ண அட்டைப் படம் என் உள்ளத்தைக் கொள்ளை கொண்டதே அதற்குக் காரணம்.
நாகப்பட்டினம் நாகை வீயெஸ்

● மதனு மிருத்தியுஞ்சயன் எழுதும் ''முற்றுப்பெறாத வாக்கியங்கள்'' முதல் அத்தியாயத்திலேயே மிகவும் விறுவிறுப்புடன் அமைந்திருந்தது. இக்கதையைப் படித்ததும், மனத்தில் தோன்றிய எண்ணம் ''இத்தொடர்கதை இன்னும் பல வாரங்களுக்கு முற்றுப்பெறாமல் இருக்க வேண்டும்.''
நாகப்பட்டினம் முத்து ராஜசேகர்

● சென்ற இதழ் கதைகள் அத்தனையும் பிரமாதம். எதைப் பாராட்டுவது எதை விடுவது என்ற வகையறியாது நிறைய அடித்து விட்டீர்களே சார். ஃபேர்வீசரையா, கண்ணீர் பணிக்கச் செய்த திருப்புமுனையையா, எல்லாவற்றுக்கும் சிகரம் வைத்தாற்போல் சூடாமணியின் திறமையால் ஜொலிக்கும், ''தங்கையே தனக்குதவி'' என்ற கதையையா? தங்கள் பத்திரிகைக்கு என்னுடைய முற்றுப் பெறாத, என்றென்றும் நிலைத்திருக்கும் பாராட்டு.
ஸ்ரீரங்கம் விஜயலக்ஷ்மி ஸ்ரீனிவாசன்

● ''ரஜனிகாந்த்'' Blow up Poster மிகச் சிறப்பாக இருந்தது. எங்கள் மன்றத்தில் பிரேம் செய்து மாட்டிவிட்டோம்; எங்கள் மன்றம் சார்பாகவும், மற்றும் உள்ள இலட்சோப லட்சக் கணக்கான ரசிகர்களின் சார்பாகவும் நன்றியைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.
காஞ்சிபுரம். ரஜனி இ. சிவமணி
செயலாளர், ஸ்டைல் மன்னன்
ரஜனிகாந்த் தலைமை ரசிகர் மன்றம்.

● யோவ், Blow up Poster ஐப் பார்த்தேன். த்சொ... த்சொ... கெடுத்திட்டீரே! பேப்பர் இன்னும் திக்காக இருக்கணுமய்யா. படமும் கலரில் இருக்கணுமய்யா. போடுவதிலும் ஒழுங்காய்ப் போட வேண்டாம்?
சென்னை-1 ஜி. மூர்த்தி

● ஜோதிர்லதா கிரிஜாவின் கதையில் சில வரிகள் என்னைத் திடுக்கிடச் செய்தன. செட்டிநாட்டு ஆசாமிகள் ('ஆசாமிகள்' என்ற வார்த்தையே எழுத்தாளரின் தகுதியைக் குறைத்துக் காட்டவில்லையா?) ஒரு பையனை ஆங்கிலப் பாடத்தில் தேறச் செய்துவிட வேண்டும் என்பதற்காகப் பணம் தர முன்வந்தார்கள் என்று குறிப்பிட்டுள்ளார். 'நகரத்தார்' பண்புகள் அறியாது எழுதிவிட்டார்! குருவி சேர்ப்பது போல் சேர்ப்பவர்கள். அளந்து செலவழிப்பவர்கள். ஆனால் தர்மச் செயல் என்று வரும் போது அள்ளி வழங்குபவர்கள். 'டியூஷன் வாத்தியார்' நாலு நாள் வரவில்லை என்றால் அதற்குரியதைக் கழித்துக் கொண்டு கொடுப்பவர்கள் ஏழாயிரம் ரூபாய் லஞ்சம் கொடுத்தார்களா? பண்டிகைக் காலங்களில் வாத்தியார் பெறும் சன்மானங்கள் வேறு இது வேறு.

கண்ணியம் மிக்க 'கல்கி'யின் பார்வையில் இது எப்படித் தப்பிற்று?
சென்னை-45 புலவர் வள்ளியப்பன்

● பத்தில் ஐந்தை எடுத்துக்கொண்டு விமர்சித்த கௌசிகன் நடுநிலை மாறாமல் ஐந்தில் மூன்றைச் சொத்தை என்று கூறியிருக்கிறார். பட்டாக்கத்தியை விமரிசித்தபோது சிவாஜிக்கு நல்ல யோசனையும் வெளியிட்டுள்ளார். பாராட்டுக்கள்.
மன்னார்குடி. சரஸ்வதி இராஜேந்திரன்

● உதிரிப் பூக்கள் விமரிசனத்தில் சாருஹாசனைப் பற்றிக் குறிப்பிட மறந்தது ஏனோ? பஞ்சபூதங்கள் விமரிசனம் நல்ல நகைச்சுவையுடன் இருந்தது.
ஸ்ரீரங்கம் திருமதி ரங்கநாயகி

● மகாலக்ஷ்மி பட விமரிசனத்தில் ஜெய்சங்கரை கௌசிகன் மக்கள் திலகம் எனக் குறித்துள்ளார். ஜெய்சங்கர் மக்கள் திலகமல்ல. மக்கள் கலைஞர். மக்கள் திலகம் எம். ஜி. ஆர். ஐந்து தமிழ்ப் படம் பார்த்த கோளாறோ?
விழுப்புரம் கே. ரபிமீரு

● 'சிறு நாடு சிறந்தோங்கட்டும்' தலையங்கம் பார்த்தோம். குடியேற்றக் கொள்கையை உறுதியாகப் பற்றி நிற்கும் தற்போதைய இலங்கை அரசின் இக்கொள்கையும் தவிர, அதன் மொழிக் கொள்கையும் தமிழர்களுக்குப் பாதகமானவை. மேலும், இந்தக் கொள்கைகள் இரண்டும் ஒன்றுக்கொன்று முரணாக அமைந்திருப்பதைத் தாங்களே இலங்கை அரசியலமைப்புச் சட்டம் 1978 லிருந்து காணலாம்.

ஜெயவர்த்தனாவுக்குத் தொண்டைமான் தரும் ஆதரவு குறித்து நீங்கள் குதூகலமடைய வேண்டாம். தோட்டத் தொழிலாளர்களின் நிலை வேறு. இலங்கைத் தமிழர் நிலை வேறு.

தமிழர்கள் பிரச்னைகள் குறித்து இலங்கை அரசு அமைத்துள்ள ஆய்வுக் குழுவின் முடிவுகளையும், அவற்றைச் செயலாக்க அரசு ஏற்கப்போகும் திட்டங்களையும் பொறுத்திருந்து பார்ப்போம்.
கான்பூர் நா. சந்திரகுமார்
கொ. க. மகிழ்ச்சிக்கண்ணன்

● திருவொற்றியூர்ப் பகுதியில் மண்ணெண்ணெய் தனியார் கடைகளில் லிட்டருக்கு ரூ. 2.30 என விற்கப்படுகிறது. பல நேரங்களில் இந்த விலை கொடுத்து வாங்கத் தயாரானாலும் கிடைப்பதில்லை. ரேஷன் கடைகளிலோ பல மணி நேரம் க்யூவில் நின்றும் ஸ்டாக் தீர்ந்து விட்டது என்று கடைக்காரர்கள் கூறி விடுகிறார்கள்.

திருவல்லிக்கேணியில் தெருவிலேயே கை வண்டிக்காரர்கள் ரூ. 1.70க்குத் தருகின்றனர்; நங்கைநல்லூரில் ரூ. 1.60க்கு விற்றதை நேரிலேயே பார்த்தேன். எரிபொருள் விஷயத்தில் என்றுதான் இந்த வயிற்றெரிச்சல் தீருமோ?

சென்னை-19 பாசி. இராமச்சந்திரன்

● அண்மையில் நானும் புதிதாக மணமான எனது உறவினர்களும் காஞ்சிபுரம் ஸ்ரீ வரதராஜஸ்வாமி கோயிலுக்குச் சென்றிருந்தோம். பெருமாளைத் தரிசித்துவிட்டு அம்மன் கோயிலுக்கு வந்தபொழுது அர்ச்சகர் மஞ்சள் தூள் பிரசாதம் கொடுத்தார். அம்மன் கோயிலில் குங்குமம் தராமலிருப்பது எங்களுக்கு மன வேதனை யளித்த காரணத்தால் அந்த அர்ச்சகரை அழைத்து வினவினோம். அவர் ''அர்ச்சனை செய்பவர்களுக்கு மட்டுமே குங்குமம் தரப்படும். யாத்ரீகர்கள் அதிகம் வருகின்ற காரணத்தால் குங்குமம் கொடுத்துக் கட்டுப்படியாகாது'' என்றார். நிர்வாகம் தினமும் அரைப் பலம் குங்குமமே தருவதாகவும் அது அனைவருக்கும் வழங்கப் போதுமானதல்ல என்றும் அறிந்தோம். பழங்காலக் கோயில்களுக்குப் புகழ் பெற்ற காஞ்சிபுரத்தில் இப்படியொரு நிலையா? மிக்க வேதனை அடைகிறோம்.

ஸ்ரீபெரும்புதூர் எஸ். வெங்கடேசன்

● ஆங்கிலேயர் நாட்டை ஆண்டுகொண்டிருந்தபோது வெளிவந்த பத்திரிகைகளில் கூட இன்று உள்ள அளவுக்கு ஆங்கிலக் கலப்படம் இருந்ததில்லை. தமிழர்களுக்காகத் தமிழில் நடத்தப்படும் பத்திரிகைகளில் Shopping page, Cover Story, ஹெல்த், Burning Problem என்றெல்லாம் எழுத வேண்டிய அவசியம் என்ன? தமிழ்ப் பத்திரிகை படிப்பவர்கள் எல்லோருக்கும் ஆங்கில அறிவு இருக்கிறது என்று வாசகர்களைப் பற்றித் தாங்கள் வைத்திருக்கும் அனுமானத்துக்கு மிக்க நன்றி. அதற்காகத் தமிழ்க் கதைகளில் ஆங்கில வார்த்தைகளைக் கலந்து எழுத வேண்டும் என்பது நியாயமாகாது. வேதனையுடன்,

சென்னை-34 ஐ. ராமச்சந்திரன்

● கல்கி மீண்டும் துவங்கிய போது காஞ்சி ஸ்வாமிகளின் திருவுருவப் படம் தாங்கிய அட்டை இதழிலிருந்து இன்று வரை தொடர்கதை எடுக்கலாம் என்று பின்னைக் கழற்றிப் பிரித்தபோது எனக்குப் பிரச்னை வந்தது. எந்த ஒரு பக்கத்தையும் வேண்டாம் என்று தள்ள முடியாத பிரச்னை. எதைத் தொட்டாலும் தரம் மிகுந்த கதைகள், கட்டுரைகள், துணுக்குகள், விஷயங்கள். பாதுகாத்து வைக்க வேண்டும் என்று உணர வைக்கிற சங்கதிகள்.

வேலூர் ஜே. வி. நாதன்






# ஈறு உபாதைகளின் முதல் அறிகுறிகள்?



**ஊத்தை (Plaque)**
எப்போதும் உங்கள் பற்களையும் ஈறுகளையும் சுற்றி கண்ணுக்குப் புலப்படாத கிருமிகளின் மெல்லிய படிவங்கள் தோன்றிய வண்ண மிருக்கின்றன. இவற்றை அகற்றாவிட்டால் செய்தால் இந்த படிவங்கள் காரை யாக உருப்பெறுகின்றன.

**பற்காரை**
பற்களின் அடிபாகத்தில் இது படிந்து, ஈறுகளில் எரிச்சல் உண்டாக்கி அவற்றை வீங்கச் செய்கிறது. காரை, பல் ஈறுகளிலும் எலும்புகளிலும் சீழ் ஏற்படுத்தி பற்களை விழச்செய்கிறது.

**இரத்தம் கசியும் ஈறுகள்**
பிரஷ் செய்யும் போது பஞ்சிலைமாக வும் மிருதுவாகவும் உள்ள ஈறுகளிலிருந்து இரத்தம் கசியும். இதனை கவனிக்காவிட்டால் இந்த ஈறுகளின் இரத்தக் கசிவு பெரும் உபாதைகளில் கொண்டு விடலாம்.

## பல் டாக்டரால் உருவாக்கப்பட்ட இந்த டூத்பேஸ்டினால் பயனடையுங்கள்.

சுவாரசியமான ஆரஞ்சு வண்ண பேக்கில் கிடைக்கிறது




### டாக்டர் போர்ஹென்ஸினுடைய ஸ்பெஷல் ஃபார்முலா

டாக்டர் போர்ஹென்ஸினுடைய ஃபார்முலாவின் திறமிக்க அஸ்ட்ரிஞ்ஜன்ட் செயல் உங்கள் ஈறுகளை வலுப்படுத்தி ஈறு உபாதைகளைத் தடுக்க உதவுகிறது. போர்ஹென்ஸ் கொண்டு பிரஷ் செய்வதால் உங்கள் வாய் தூய்மையாக, நன்னிலையில் மேலும் நலமுடன் திகழ்கிறது.

### பல் டாக்டர்கள் கூறுகிறார்கள்

தவறாமல் பற்களை பிரஷ் செய்வதும் ஈறுகளைத் தேய்த்துக் கொடுப்பதும் ஈறு உபாதை, பற்சிதைவுகளைத் தடுக்க உதவும். ஆகவே, இரவிலும் காலையிலும் போர்ஹென்ஸ் டூத்பேஸ்ட் மற்றும் போர்ஹென்ஸ் டபிள் ஆக்ஷன் டூத் பிரஷ் கொண்டு பற்களைத் துலக்குங்கள், ஈறுகளைத் தேய்த்துக் கொடுங்கள்.

ஈறுகள்
கெட்டால்
உடல்
நலம்
கெடும்



**இலவசம்!** "உங்கள் பற்களையும் ஈறுகளையும் பராமரிக்கும் முறை" பற்களையும் ஈறுகளையும் பராமரிப்பது பற்றிய வண்ணப் புத்தகம்.
25 பைசா தபால் தலையுடன் இம்முகவரிக்கு எழுதுக: போர்ஹென்ஸ் டென்டல் அட்வைஸரி ப்யூரோ, த.பை.எண் 11463, பம்பாய் 400 020.
எம்மொழியில் வேண்டுமெனத் தெரிவிக்கவும்.

# போர்ஹென்ஸ்

பல் டாக்டரால்
உருவாக்கப்பட்ட டூத்பேஸ்ட

310-F-203 TM



※ இடமிருந்து வலமாக: ஜெய் கிஷன், பாடலாசிரியர் ஆனந்த பக்ஷி, குமரன்

※ எம். எஸ். விசுவநாதன்

※ சுதர்ஸன்

※ இடமிருந்து வலமாக: சித்ர குப்தா, குமரன், ஏ. வி. திருலோகசந்தர்

※ இடமிருந்து வலமாக: பல்ஸாரா, வேதா, குமரன்.

# இசை அமைப்பாளருடன் சில அனுபவங்கள்!







"**ஸரஸ்வதி ஸ்டோர்ஸ்**" என்று சொன்னாலே எல்லோருக்கும் ஏ. வி. மெய்யப்பச் செட்டியாரின் நினைவுதான் வரும். 1934 லேயே தோன்றிய பழம் பெரும் நிறுவனம்.

"அந்தக் காலத்தில் இசைத்தட்டு தயாரிப்பதே மிகப் பெரிய ஒரு விஷயம். ஜெர்மனியிலிருந்து பாளம் பாளமாக மெழுகைக் கொண்டு வருவார்கள். இங்கு ஒருவர் மைக்கில் பாட அது மெழுகில் ரிக்கார்ட் ஆகும். மைக்கை அவ்வப் பொழுது தனியே எடுத்து சூரியனின் ஒளி பாய்ச்சி சூடாக்க வேண்டும்! கிராமபோன் பெட்டியைப் போன்ற ஓர் அமைப்பில் அந்த மெழுகை வைத்திருப்பார்கள். மெழுகின் மேலுள்ள ஊசி, பாடப் பாட மெழுகின் மேல் கோடு போடும். அந்த மெழுகை ஜெர்மனிக்கு அனுப்பி இசைத் தட்டாக்கிக் கொணர்வார்கள். நாளடைவில் ஜெர்மனிக்கு அனுப்புவது நிறுத்தப்பட்டு கல்கத்தாவிலேயே இசைத்தட்டு தயாரிக்க ஆரம்பித்தார்கள். சமீப காலமாக இத்துறையில் ரொம்ப ரொம்ப முன்னேறி விட்டோம்" என்று சரஸ்வதி ஸ்டோர்ஸின் இன்றைய அதிபரும், ஏ. வி. எம். செட்டியாரின் குமாரர்களின் ஒருவருமான திரு. **குமரன்** கூறினார். அதுமட்டுமல்லாமல் சில இசையமைப்பாளர்களிடையே தமக்கு ஏற்பட்ட அனுபவங்களையும் கூறுகிறார்:

**சித்ரகுப்தா:—**

"நானும் ஒரு பெண்", "களத்தூர் கண்ணம்மா" ஆகியவற்றை ஹிந்தியில் எடுக்கும்போது இவர்தான் எங்கள் இசையமைப்பாளர். "நானும் ஒரு பெண்" படத்தில் வரும் "கண்ணா கருமை நிறக்கண்ணா" என்ற பாடலைக்கேட்டுப் பாராட்டி அதே டியூனை ஹிந்திப் படத்திலும் வைத்துக்கொள்வதாகக் கூறினார். பாடலை எழுத வந்த ராஜேந்திர கிஷன் பாடலின் ஓரிடத்தில் ஆண்பாலுக்குப் பதில் பெண் பால் பொருள் தருகின்ற ஒரு வார்த்தையை எழுதினார். இதைக் கவனித்த சித்ரகுப்தா, "கண்ணன் ஆண்பால். நீங்கள் பெண்பால் போல் எழுதியிருக்கிறீர்களே? தவறு" என்றார். "நீங்கள் வெறும் இசையமைப்பாளர்தான் கவிஞரல்ல" என்று வாதாடினார் ராஜேந்திரகிஷன். "நான் இசையமைப்பாளனே அல்ல. சந்தர்ப்ப வசத்தால் இத்துறைக்கு வந்தவன். ஆங்கிலம், ஹிந்தி ஆகிய மொழிகளில் உள்ள இலக்கண, இலக்கியங்களைக் கற்றறிந்தவன்" என்று சித்ரகுப்தா சொல்ல, கடைசியில் அவர் கட்சியே வென்றது! சித்ரகுப்தா ஆங்கில இலக்கியத்தில் எம். ஏ. பட்டம் பெற்றவர்.

**சங்கர் ஜெய்கிஷன்:—** ஒரு படத்துக்கு இசையமைக்கப் புகழ் பெற்ற இந்த இரட்டையர்களைக் கேட்டோம். அவர்கள், "நாங்கள் பெரிய நடிகர், நடிகைகள் நடிக்கும்



படங்களுக்குத்தான் இசையமைப்போம். எங்கள் பாடல்களுக்கு அந்த மாதிரி நடிகர் நடிகைகள்தான் வாயசைக்க வேண்டும்'' என்றார்கள். பிறகு லக்ஷ்மிகாந்த் பியாரிலால், ஆர். டி. பர்மன் ஆகியோர் போட்டிக்கு வந்தவுடன் இந்தக் கொள்கையை மாற்றிக்கொண்டார்கள். எங்களது ஒரு படத்துக்கு இசையமைக்க நானும் ஜெய்கிஷனும் உட்கார்ந்தோம். ஒவ்வொரு முறையும் அவர் ஒரு புது டியூனைக் காண்பிக்கும் போதும் எனக்கு அது திருப்தியாக இருக்காது. இவருக்கு இரு குழந்தைகள். அந்தக் குழந்தைகள் தங்கள் நர்சரிப் பள்ளியில் கற்ற ஒரு பாடலைப் பாடிக்கொண்டிருந்தார்கள். நான் திடீரென்று ''உங்கள் குழந்தைகள் பாடுவதைக் கேளுங்கள் மிஸ்டர் ஜெய்கிஷன் அந்த டியூன் நன்றாக இல்லை? ''என்றேன். அந்த டியூன் தான்''தோ மஸ்தானு தோ திவானு'' என்ற பாடலாக மாறியது.

**மதன் மோஹன்:-** ''பாய் பாய்,'' ''மன்மோஹி'' ஆகிய படங்களுக்கு இசையமைத்துள்ள இவர், ஒரு உடற்பயிற்சி பிரியர். இவர் வாத்தியங்களுக்கு நடுவில் நின்று கைகால்களை ஆட்டிக்கொண்டேயிருப்பார். அப்படி ஆட்டிக்கொண்டே திடீரென்று முஷ்டியை மடித்துத் தமக்குத் தாமே அழகு பார்த்துக் கொள்வார்! எப்பொழுது தண்டால் பஸ்கி எடுப்பார் என்று சுற்றியிருப்பவர்கள் ஆவலாகக் காத்துக் கொண்டிருப்பார்கள்! அந்த அளவுக்கு உடலைப் பேணிக் காப்பவர். இவரது உதவியாளர்தான் இரண்டு கண்ணும் தெரியாத ஹோமி. பின்னர் ஹோமி மற்றொருவரை இணைத்துக் கொண்டு ஸோனிக் ஹோமி என்று இசையமைப்பாளர் ஆனார்.

**லக்ஷ்மிகாந்த் பியாரிலால்:-** ''வாட் வா'' என்பது ''அன்னே''யின் ஹிந்தி வடிவம். நாங்கள் ''பூவாகிக் காயாகிக் கனிந்த மரம் ஒன்று'' என்ற பாடலுக்கு ஹிந்தியில் டியூன் போட்டுக் கொண்டிருந்தோம். அதே நேரத்தில் எங்களது தமிழ்ப் படத்தின் பாடல் தயாராகி விட்டதாகவும் அதை நான் கேட்கவேண்டும் என்றும் எனது உதவியாளர் வந்து சொன்னார். ''தத்தை நெஞ்சம் முத்தத்திலே, தித்தித்ததா இல்லையா'' என்ற பாடல் அது. என்னுடன் இசையமைத்துக் கொண்டிருந்த லக்ஷ்மிகாந்த் பியாரிலாலை அழைத்து, ''வாருங்கள் விஸ்வநாதன் இசையமைத்த ஒரு பாடலைக் கேட்போம்'' என்று கூறி அழைத்துச் சென்றேன். பாடலைக் கேட்டவுடன் அவர், ''இது ஓ. பி. நய்யார் இசையமைத்த பாடலின் காப்பி'' என்றார். எனக்கு வந்ததே கோபம்! ஓ. பி. நய்யாரின் எந்த பாடல் என்று உங்களால் குறிப்பிட்டுக் கூறமுடியுமா?'' என்றேன். ''சரியாக நினைவில்லை'' என்று நழுவப் பார்த்தார். நான் சொன்னேன்: ''இது எம். எஸ். விஸ்வநாதன் இசையமைத்த பாடல். சுயமாகச் சிந்தித்துப் பல புது டியூன்களைப் போடக்கூடியவர். நீங்கள் நினைப்பதுபோல் அல்ல. அவரது வரவால் திரைப்பட இசையே ஒரு புது மெருகுடன் இயங்குகிறது'' என்று. இந்தச் சம்பவத்துக்குப் பிறகு லக்ஷ்மிகாந்த் பியாரிலால் மீது எனக்கு இருந்த மதிப்பு சிறிது குறைந்தது.

**ஆர்.டி. பர்மன்:** ''ஜெய் ஸோக்கே தைலா'' என்ற படத்துக்காகப் பாடல் பதிவு நடந்து கொண்டிருந்தது. லதா மங்கேஷ்கர் பாடுகிறார். முதல் டேக் சரியாக வரவில்லை. இரண்டாவது டேக்கும் அதே நிலைமைதான். மூன்றாவது டேக் நடந்து கொண்டிருந்தது. ஸிதார் வாத்தியத்தின் தந்தி அறுந்துவிட்டது. ஆனால் ஆர். டி. பர்மனோ ''லதாஜி கோபித்துக் கொள்வார்கள். அதனால் இந்த டேக் அப்படியே போகட்டும்'' என்று கூறிவிட்டார். எனக்கோ நான்காவது டேக் எடுக்கவேண்டும் என்று விருப்பம். இதற்குள் டேக் முடிந்து லதா மங்கேஷ்கர் காரிலேறிக் கிளம்பிவிட்டார்.

''சரிப்படுத்திவிடலாம்'' என்றார் ஆர்.டி. நான் பல ஒலிப்பதிவாளர்களிடமும் பணியாற்றியிருக்கிறேன். எனவே தைரியமாக அந்தப் பாடலை வாங்கிக்கொண்டு நானே உட்கார்ந்து எடிட் செய்தேன். சரிப்படுத்திய பாடலை ஆர்.டிக்கு அனுப்பினேன். ''உங்களால் இவ்வளவு சிறப்பாகச் செய்ய முடிகிறதே'' என்று வியந்து பாராட்டினார்.

**சுதர்ஸனம்:** களத்தூர் கண்ணம்மா படத்துக்காக நாங்கள் பாடல் இசையமைக்க உட்கார்ந்து கொண்டிருந்தோம். அவர் வாசித்துக் காண்பித்த எந்த டியூனும் எனக்குப் பிடிக்கவில்லை. அவர் ஒரு ஹிந்தி டியூனை அப்படியே போட்டுக் காண்பித்து ''இதுதான் செட்டியாருக்குப் (என் தகப்பனார்) பிடிக்கும்'' என்றார். ''செட்டியாருக்குப் புது டியூன் போட்டாலும் பிடிக்கும். அதை நான் பார்த்துக் கொள்கிறேன்;

## பாடல் இல்லாத படம்!



அந்த நாளில் படத்தின் சிறப்பான அம்சம் பாடல். ஆனால் பாடலே இல்லாத படம் எடுத்து வெற்றிபெறும் துணிவு திரு ஏ. வி. எம். அவர்கட்கு இருந்தது. படம் **அந்தநாள்!**

—ஆர். பி. சாரதி

♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦

நீங்கள் டியூன் போடுங்கள்'' என்றேன். அப்பொழுது எங்களது இசைக்குழுவில் உள்ள வயலின் வித்வான் செங்கல்வராயன், ''அம்மாவும் நீயே அப்பாவும் நீயே'' என்ற பாடலை டியூன் போட்டுக் காண்பித்தார். அதைத்தான் சுதர்ஸன் பாலிஷ் செய்து பாடலாக உருவாக்கினர். ''கண்ணு கருமை நிறக் கண்ணு''வின் டியூனுக்கும் மூலாதாரம் செங்கல்வராயன்தான்.

**வேதா :** ''எத்தனை அழகு இருபது வயதினிலே'' இந்தப் பாடலை ''அதே கண்கள்'' படத்துக்காக இசையமைத்துக் கொண்டிருந்தோம். வங்காளத்திலிருந்து புகழ் பெற்ற இசையமைப்பாளர் வி. பல்ஸாரா எங்களுடைய ஸ்டுடியோவைப் பார்க்க வந்திருந்தார். வேதாவின் இசையமைப்பையும், குறிப்பிட்ட இந்தப் பாடலுக்கு எவ்வளவு இசைக் கருவிகள் வைத்திருக்கிறார் என்றும் பார்த்தவுடன் அதிசயித்துப் போனார் பல்ஸாரா. ''பெரிய பாடலாக இருந்தாலும் கூட 15 இசைக் கருவிகளுக்குமேல் வைக்க மாட்டோம். 60 இசைக் கருவிகளா?'' என்று அதிசயித்தார். அந்த அளவுக்குத் திறமையாக இசையமைத்தவர் வேதா.

**எம். எஸ். விஸ்வநாதன் :** அப்பொழுது ''My Fair Lady'' வந்த புதிது. அதில் உள்ள ஒரு பாட்டைப் போலவே எங்களுக்கும் ஒரு பாட்டு வேண்டுமென்று விஸ்வநாதனிடம் கேட்டோம். அவர் ஒவ்வொரு டியூனாக வாசித்துக் காட்டிக் கொண்டே வந்தார். நான் டேப்பை ஆன் செய்து அவர் அமைக்கும் டியூனை டேப் செய்து வந்தேன். நான் விரும்பும் டியூன் கிடைத்தவுடன் ''நிறுத்திக் கொள்ளுங்கள்'' என்று கூறி விட்டேன். அந்த டியூனை மட்டும் தனியாக டேப் செய்து பாடலாசிரியர் வாலிக்கு அனுப்பிப் பாடலை எழுதச் சொல்லி அதேடியூனைத் திரும்பவும் பாட்டுடன் டி.எம். எஸ்ஸுக்கும் அனுப்பினேன். அந்தப் பாடல் தான் ''அந்தநாள் ஞாபகம் நெஞ்சிலே வந்ததே!''

பேட்டி: **''சந்திரன்''**



# ஒலிப்பதிவில் ஒப்பற்ற சாதனைகள்!



**HMV நிறுவனத்தின் ஒலிப்பதிவாளரும் "காஞ்சி காமாட்சி" படத்தின் இசை அமைப்பாளருமான "ரகு", சில ஆண்டுகளுக்கு முன் ஜப்பான் சென்று அங்கு ஒலிப்பதிவின் முன்னேற்றங்களைக் கண்டுள்ளார். அவர் கூறுவன பிரமிப்பில் ஆழ்த்துவதாய் உள்ளன.**

முதலில் ஒரு டிராக்கில் ஆரம்பித்த ஒலிப்பதிவு இன்று எட்டு டிராக் ஸ்டீரியோ போனிக் முறை வரை வந்திருக்கிறது. ஆனால் இதற்கு மேலும் முறையே 16, 24, 32, 48 என்று டிராக்குகளின் எண்ணிக்கை உயர்ந்து கொண்டே போகிறது. ஆனால் நமது நாட்டில் 8 டிராக் முறையே இன்னும் தொடக்கத்தில் தான் இருக்கிறது. இசைத்தட்டு ஸ்டீரியோ (2 சானல்), டேப் காஸட் முறைகளில் 4 சானல்கள், 70mm சினிமாவுக்குத் தயாரிக்கும் 6 சானல் Stereo, இவை நமது நாட்டில் அறிமுகப்படுத்தப்பட்டு விட்டன என்றாலும் பரவலாக உபயோகிக்கப்படவில்லை. காரணம் நமது பொருளாதார நிலைமையே.

இந்த அளவில் நாம் முன்னேறுமுன்பே மேனாடுகளில் வெகு வேகமாகப் பல முன்னேற்றங்களைச் சாதித்தபடி இருக்கிறார்கள்.

உதாரணமாக, மனிதத்தலை போன்ற ஒரு Dummy Head சாதனத்தை வைத்து இரு காதுகளின் உள்ளே இரண்டு மைக்குகளைப் பொருத்தி, "தத்ரூபமாக" காதுகளின் கேட்கும் தன்மையைப் போலவே பல ஒலிகளின் தனிப்பட்ட, சேர்ந்த அளவுகளை டேப் டிராக்குகளில் பதிவு செய்து, வரிசைக்கிரமமாக ஒலிகளின் வால்யூம், கோணங்கள், மற்றும் வண்ணங்களைப் பலவாறாக அலசிப் பின் சேர்த்துத் தத்ரூப நிலையில் அளிக்கிறார்கள். இரண்டு மைக்குகள்தானே என்று கேட்க வேண்டாம். இந்த மைக்குகள் வைக்கப்படும் "காதின் அறைகள்" தத்ரூபத் தன்மையை அதிகப் படுத்துகின்றன. பல ஒலிச் சேர்க்கைகளை அலசி, பிரித்துப் பங்கீடு செய்யும் முறையை கம்ப்யூட்டர் செய்கிறது!

## DIGITAL RECORDING

ஒலிகளை "அனலாக்" முறையாகத் தயாரித்து, டிஜிடல் முறைக்கு மாற்றுகிறது. ஒலிப்பதிவின்போது எவ்வளவு சுதாரித்துக் கொண்டு செய்தாலும், மனித முயற்சிகளுக்கு அப்பாற்பட்ட எதிர்பாராத தவறுகள் நேர்ந்தால், அவற்றைக் கட்டுப்படுத்தித் தவறுகளே ஏற்படாதவாறு பிரதிபலிக்கும் முறை இது. டி. வியில் மனித உருவத்தை வரி வரியாகப் பிரித்து (Scanning) திரும்பவும் டி. வி. பெட்டியில் "அஸெம்பிள்" செய்வது போல் ஒலிகளை "BITS" என்னும் சிறு சிறு துண்டுகளாகப் பிரித்து, கடைசியாக உருவகப்படுத்தும் வேலையை எப்போதும் போல் கம்ப்யூட்டரே செய்கிறது!

அடுத்து P.C.M. எனப்படும் Pulse Code Modulation எனப்படும் முறை. இப்படி ஒவ்வொரு முறையாகச் சொல்லிக் கொண்டிருந்தால் சொல்லிக் கொண்டே போகலாம். ஆனால் இன்று பரவலாக இருக்கும் இசைகள் எலக்ட்ரானிக் இசையும், கம்ப்யூட்டர் இசையும் தான். எலக்ட்ரானிக் இசையில் இப்போது நமக்கு அறிமுகமாகியுள்ள சாம்போ Organ Synthesiser, Strings போன்ற கருவிகளுக்கும் மேலே Special Key Board Modulators கருவிகள் வழக்கத்தில் வந்திருக்கின்றன. இவை ஒரு வயலின் அல்லது ஒரு குழல் இசையை உள்ளே வாங்கிப் பல வயலின்கள், பல குழல்கள் கூட்டாக ஒலிக்கும் வண்ணம் செய்கின்றன. மற்றும் முதலில் கேட்கும் குழலின் சுரங்களுக்கு "கவுண்டர்" ஆக 2வது, 3வது, 5வது, சுரங்களை உருவாக்கி ஒலி பெருக்கியில் அளிக்கும்.

### கம்ப்யூட்டர் இசை

நாம் கேட்க விரும்பும் இசை வடிவங்களை கம்ப்யூட்டரில் ஒலிகளின் எண்ணிக்கைகளாக அடுக்கி நினைவில் வைத்திருக்கச் செய்து கடைசியில் அவைகளைக் கூட்டுச் சேர்த்து ஒலிக்கச் செய்யலாம். இவ்வாறு செய்கையில் பல விற்பன்னர்கள் பங்கேற்று நடத்திய இசை நிகழ்ச்சியின் கேள்வி இன்பத்தை நாம் அனுபவிக்கலாம்.

இத்தகைய ஒப்பற்ற சாதனைகளைப் புரிந்துள்ளது பற்றி மேல் நாட்டினரை விசாரித்தால், "நாங்கள் ஒலியின் உண்மையான சொரூபத்தைக் காண விழைகிறோம். இப்போது ஓரளவு தான் சாதித்திருக்கிறோம்" என்று தான் கூறுகிறார்கள்!

பேட்டி :- **ருக்மிணி ராமச்சந்திரன்**

"ஒவ்வொரு தியேட்டரிலும், 30% ஷெட்யூல்டு காஸ்ட்; 40% பேக்வார்டு கிளாசுக்கு ஃப்ரீபாஸ் வழங்கக் கோரி ஒரு போராட்டம் நடத்தலாமா?"

- "சுதர்சன்"



# பூக்குழி

**லக்ஷ்மி**

## 13

பம்பாய் விமான நிலையத்தில் இறங்கி; சுங்க வரி இத்யாதிகளை முடித்துக் கொண்டு அவர்கள் வெளியே வருவதற்குள் விடியற் காலை இரண்டு மணியாகி விட்டது.

அவர்கள் பயணப்பட்டு வந்த விமானக் கம்பெனியின் செலவிலேயே பெரியதொரு ஹோட்டல் ஒன்று களைப்புத்தீர அடுத்த பயணம் வரை தங்க வசதி செய்து தரப் பட்டது. சென்னைக்குக் கிளம்ப அவர்கள் பிற்பகல் விமானத்துக்குக் காத்திருக்க நேர்ந்தது.

ஹோட்டல் அறைக்குள்ளே பெட்டிகளை ஆட்கள் கொண்டு வந்து வைத்தனர். தோளில் சுமந்து வந்த பைகளைக் கீழே இறக்கி வைத்துவிட்டு இருவரும் படுக்கையில் சாய்ந்தனர். கண்களை மூடிச் சிறிது அயர் வதற்குள் பொழுது விடிந்து விட்டது.

காமேஷ் பரபரப்புடன் பிரஷ்-பேஸ்ட் சகிதம் குளியலறைக்குள் புகுந்துகொண் டான். வழி நெடுகிலும் பயணத்தின்போது அவன் ராஜ்குமாருடன் அதிகம் பேசவில்லை. தாய்நாட்டை விமானம் நெருங்கத்தொடங் கியதுமே அவனது உள்ளத்துப் போராட் டங்களின் அழுத்தமும் அதிகரிக்கத் தொடங் கியது.

துயரமா கோபமா என்று அவனாலேயே கணிக்க முடியாததொரு விசித்திர உணர் விலே கட்டுண்டு தத்தளித்துக் கொண் டிருந்தான்.

ஊர் திரும்ப ஆவன செய்ய ஆரம்பித்ததி லிருந்து ராஜ்குமாருக்கு ஓய்வே இருக்கவில்லை. ஒரே அலைச்சல். முதல் நாள் இரவு சரியாகத் தூங்கவும் இல்லை. அத்துடன் விமானப் பயணத்தின் களைப்பு. அதனால் அவனையும் அறியாது ஆழ்ந்து தூங்கிவிட்டான்.

இன்பமானதொரு கனவினின்று திடுக் கிட்டு விழிப்பு ஏற்பட்டபோது திரை ஒதுக் கப்பட்ட ஜன்னலினின்று உள்ளே விழுந்த சூரிய ஒளி கண்களைக் கூசச் செய்தது. அறை முழுவதும் இம்பீரியல் லாதர் ஷேவிங் லோஷனின் மணம் கமழ்வதை உணர்ந்து திரும்பிப் பார்த்தான். இரண்டு நாட்களாகக் கவனிக்காது அசட்டையாக விட்டிருந்த முகத்தை மழித்துக் கொண்டு குளித்து முடித்துவிட்டுச் சுத்தமான உடையில் கண் ணாடி முன் தலையைச் சீவிக்கொண்டு காமேஷ் நின்று கொண்டிருந்தான்.

''அதற்குள் ஏன் எழுந்திருந்தே? இன்னும் கொஞ்ச நேரம் களைப்புத் தீரத் தூங்கி யிருக்கலாமே?'' அன்புடன் கடிந்து கொண்ட ராஜ்குமார் படுக்கையின் மீது நிமிர்ந்து உட் கார்ந்தான்.

''இதுவரையில் தூங்கியது போதாதா? இனியாவது விழிப்போடு இருக்க வேண் டாமா?'' சிரித்தவாறு காமேஷ் பதில் அளித் தாலும் வார்த்தைகள் சூடாக இருந்தன.

''அப்படீன்னு நானும் சீக்கிரம் தயாராகிட றேன். ரெண்டு பேரும் கீழே போய் இந்தப் பெரிய ஹோட்டல் சாப்பாட்டறையில் நமக் குச் சாப்பிட என்னதான் கிடைக்கிறதுன்னு நோட்டம் விடலாம்.'' வேடிக்கையாகச் சொல்லிவிட்டுத் துவாலையுடன் குளியலறைப் பக்கம் திரும்பினான் ராஜ்குமார்.

''நீ எனக்காக அவசரப்பட வேண்டாம். எனக்குத் 'தெரிஞ்சவங்களைப் பார்த்து வர நான் கிளம்பிண்டிருக்கேன். காப்பிக்கோ, சாப்பாட்டுக்கோ எனக்காக நீ காத்திருக் காதே.'' டையை எடுத்துத் தோளில மாட் டிக் கொண்டு காமேஷ் கிளம்பினான்.

''அப்படியா, சரி. ஆனால் சீக்கிரம் திரும்பி விடு. ரயிலைத் தவற விடுவது போல் சிலர் விமானத்தையும் தவற விடுவதுண்டு.'' ராஜ் குமார் உற்சாகமாகச் சிரித்தான்.

''இனி என் வாழ்க்கையில் எதையும் தவற விடுவதில்லேன்னு தீர்மானம். நீ கவலைப் படாதே. வந்துவிடுவேன்.' தன்னுள் பொங் கிய ஆத்திரத்தை அடக்கிக் கொண்டு கதவைத் திறந்து வெளியேறினான் காமேஷ்.

பம்பாய்ப் பட்டினம் அவனது உள்ளங் கைக்குள்ளே அடங்கி விட்டிருப்பதுபோன்ற ஒரு நினைப்பு அவனுக்கு. வளர்ந்து ஆளாகி,

---

### ஒரு புதிய டியூன்

திரை உலகில் ஒரு புதிய டியூன் போன்று இந்தத் திரை இசை சிறப் பிதழும் உருவாகியுள்ளது.

இது சம்பூர்ண ராகம் அல்ல; சப்தஸ்வரங்களும் இதில் இராது. இருப்பினும் இந்த மெல்லிசை ஒரு ஜன்ய ராகமாக வாசகர்கள் மத்தி யில் 'ஹிட்' ஆகும் என்றே எதிர் பார்க்கிறோம்.

மக்கள் மனங்களைக் குதுகலிக்க வைத்து வரும் திரை இசையின் தொடக்க நாளிலிருந்து இன்று வரை அத்துறையின் பல்வேறு பிரிவு களிலும் அணில் பணியும் அனுமன் பணியும் ஆற்றியுள்ள எத்தனையோ பேர்களைப் பற்றி இச்சிறப்பிதழில் விவரங்கள் இல்லை எனினும் அவர்கள் அனைவரையும் இன்று கல்கி வாச கர்கள் சார்பில் மனமார வாழ்த்து கிறோம்.

அவன் வாழ்ந்து பழக்கப்பட்ட நகரம் அது. அவனுடைய சந்து பொந்துகள் அனைத்தும் அவனுக்கு மனப்பாடம். ஹோட்டல் வாசலில் நின்ற ஒரு டாக்ஸியில் ஏறிக்கொண்டு கொலாபாவுக்கு விரைந்தான்.

தேவசகாயம் வக்கீல் தொழிலில் அப்படி ஒன்றும் வாரிக் கொட்டிவிடவில்லை. அவர் காலம்வரை ஏதோ வசதியாக இருந்து விட்டுப் போயிருந்தார். காமேஷ் பஹ்ரானுக்குச் சென்ற சில மாதங்களில் அவர் இறந்துவிட்டதாகக் கடிதம் வந்தது. இப்போது அவரது மனைவியைக் கண்டு ஆறுதல் சொல்லிவிட்டுப் போகத்தான் வந்திருந்தான். மேலும் பம்பாய் வந்ததுமே அந்த வீட்டுக்குப் போக வேண்டும் என்றதொரு தவிர்க்க முடியாத ஆவல்.

அந்தப் பகுதியில் இந்த இரண்டு ஆண்டு காலத்தில் எத்தனையோ புது ஃப்ளாட்டுகள் முளைத்து விட்டிருந்தன. ஆனால் தேவ



சகாயத்தின் பழங் காலத்து வீடு அதே நிலையில் சாய்ந்த சுற்றுச் சுவருடன் சூழ்நிலைக்கு ஒரு திருஷ்டி பரிகாரமாக நின்று கொண்டிருந்தது. ஒரு துளியும் மாறுதல் இருக்கவில்லை. திறந்தால் கிரீச்சிட்டு அல றும் அதே துருப்பிடித்த கேட்டு. வெடிப் பும் குழிகளும் நிறைந்த வாசல் வராந்தா வின் அதே தரை, தரையிலிருந்து வராந்தா ஓரத்திலே கம்பி உறிகளில் தொங்கிய பூச்சட்டிகளில் அதே செடிகொடிகள். அதே பழைய பிரம்பு நாற்காலி என்று வீடு அதே நிலையில்தான் இருந்தது. அழைப்பு மணியை அழுக்கினான். மெல்லியதாகக் காலடி ஓசை கேட்டது. கதவைத் திறந்த சந்தோஷம் மாளுக்கு அவளை அடையாளம் கண்டு கொள்ளச் சில விநாடிகள் சென்றன.

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆



''ஒரே ஒரு லட்டுதான் இருக்கு என்கிறாயே! அதைக்கொடு. நான் இவளை மடியில் உட்கார வச்சுக்கிறேன்...''
-சுதர்சன்

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

அவளும் வெகுவாக மாறிவிட்டிருந்தாள். கணவனை இழந்த துயரம் கப்பிய முகம், தும்பைப் பூவாக வெடித்துவிட்ட கூந்தல், பாதியாக வற்றிவிட்ட உடல், தளர்ந்த நடை. முன்னை விட அவள் மிகவும் முதுமை யடைந்து விட்டிருந்தாள்.

''வா...உட்கார்.'' உபசரித்தபடி மெல்ல உள்ளே திரும்பினாள்.

சுற்றுமுற்றும் பிரமிப்புடன் பார்த்தபடி அவன் அந்த முன்னறையில் கிடந்த தொய்ந்துபோன பழைய சோபா ஒன்றில் அமர்ந்து கொண்டான்.

''என்ன அப்படிப் பார்க்கிறே? பிள்ளைகள் எல்லோரும் ஆளுக்கு ஒரு வேலை தேடிக் கிட்டு மூலைக்கொருத்தராய்ப் போய்ட்டாங்க. அவருக்கப்புறம் இந்தப் பெரிய வீடு எனக்கு எதுக்கு? இதையும் சமையலறையையும் மட்டும் வச்சுக்கிட்டு மத்ததை வாடகைக்குக் கொடுத்திட்டேன். இப்போ இதிலேதான் என் ஜீவனம்.'' மென்மையாக முறு வலித்தாள்.

''உங்களுக்கு என்ன வாங்கி வரதுன்னே தெரியலே. அதனால்...'' என்று தயங்கி விட்டுத் தோல் பையைத் திறந்து அவ ளுக்காக அவன் வாங்கி வந்திருந்த பிஸ்கட் டின்னை எடுத்து மேஜைமேல் வைத்தான்.

''இதெல்லாம் எதுக்கு? நீ எங்கேயாவது சுகமா இருந்தாச் சரி. நீ போட்ட ஆறுதல் கடிதம் வந்தது. நன்றி.... இரு உனக்குக் கொஞ்சம் காப்பி போட்டு எடுத்து வரேன்.'' உள்ளே திரும்பினாள்.

''ஏன் சிரமப்படறீங்க? ஹோட்டலிலே எனக்கு எல்லாம் கிடைக்கும்; உங்களைப் பார்த்துட்டு... நான் இங்கே திரும்பி வரும் போது கட்டாயம் வந்து வாங்கிக்கொள்ள ணும்னு ஏதோ கடிதம் எழுதியிருந்தீங்களே அதை வாங்கிட்டுப் போகத்தான் வந்தேன்.'' பேசிக் கொண்டே அவள் பின்னால் நடந் தான்.

சமையலறை வாசற்படியருகே வந்ததுமே அவன் நெஞ்சை என்னவோ அடைத்தது.

சாயம்போன சிவப்புச் சேலையும் வெள்ளை ரவிக்கையுமாக அடுப்பருகே அம்மா நின்று கொண்டு கரண்டியால் சோற்றுப் பானையைக் கிளறுவது போன்றதொரு பிரமை. ஆடிப் போய்விட்டான் அவன்.

வறுமையால் வாடி, கடுமையாக உழைத்து முடிவில் இருமலில் செத்து ஒழிந்த அவ னது தாய் கண்ட சுகம்?

வாழ்க்கை அவளை எவ்வளவு கலபமாக ஏமாற்றிவிட்டிருந்தது!

நிற்கப் பிடிக்காது கோபத்துடன் முன் னறைக்கு வந்தான். அந்த வீட்டின் ஒவ் வொரு பகுதியும் அவனது தாயையும் அவனது இளமைப் பருவத்தையும் வலிமை யாக நினைவுறுத்தின. நெஞ்சை அடைத்த துயரத்தின் சுமையைத் தாள முடியாது அறைக்குள்ளே முன்னும் பின்னும் உலாவி னான் காமேஷ்.

ஏழைச் சமையல்காரியின் மகனான அவ னது இளமைப் பருவம் முழுவதும் எப்படித் தான் வீணாகப் போயின?

எத்தனை பணத்தைச் செலவழித்தாலும் அந்தக் கடந்த காலத்து மேடு பள்ளங்களை இப்பொழுது அவனால் நிரப்ப இயலுமா? தாழ்வு உணர்வு ஆழமாகப் பதிந்து உள்ளத் திலே விட்டுப் போயிருந்த தழும்புகளைத் தான் மருந்து கொண்டு அழிக்க முடியுமா?

ஏற்கனவே பலவற்றை எண்ணி மனம் கொதித்துக் கொண்டிருந்தவன் பம்பாய் வந்ததும் அந்த உள்ளக் கொதிப்பு பன் மடங்காக — பெரும் தீயாக — கொழுந்து விட்டு எரிவதை உணர்ந்தான்.

அதற்குக் காரணமானவர்களை வெறுத் தான் — சபித்தான் — மனத்துக்குள் சாடி னான். பழி வாங்க வேண்டுமென்றதொரு கொலை வெறி புயலாக எழுந்து தன்னை ஆட்டிப் படைப்பதையும் புரிந்துகொண்டு தானிருந்தான்.

# அரிப்பும் எரிச்சலும் தரும் வியர்க்குருத் தொல்லையிலிருந்து விடுதலை பெறுவீர்!



நைஸில்
உபயோகிப்பீர்
மிகத்துரித
நிவாரணம் அளிக்கும்
வியர்க்குரு பவுடர்






**வாங்குவீர் நைஸில்— விரட்டுவீர் வியர்க்குருவை. விலை 6 ரூ. 63 பைசாதான்.***

* அதிகபட்ச சில்லறை விற்பனை விலை. உள்ளூர் வரிகள் தனி.





அரிப்பு, எரிச்சல் போன்ற தொல்லைகளிலிருந்து மிகத் துரித நிவாரணம் தரவல்லது வியர்க்குரு பவுடர் ஒன்றுதான் நைஸில். விசேஷ மருந்துக் கலவையுள்ள நைஸில், ஒவ்வொரு கட்டத்திலும் வியர்க்குருவை எதிர்த்துப் போராடுகிறது.

1. அதிகம் வியர்க்காமல் தடுக்கிறது.
2. வியர்வையை உறிஞ்சுகிறது.
3. துர்நாற்றம் ஏற்படுத்தும் கிருமிகளை அழிக்கிறது.
4. சருமத்திற்கு இதமூட்டுகிறது.

GN-79-364 E Tam



## ஒன்றில் ஐந்து!

ஐந்து இசை அமைப்பாளர்கள் ஒரே படத்துக்கு இசை அமைக்க ஒத்துழைப்பது திரை உலகம் இன்றுவரை காணாத புதுமை. படம்: ''கண்ணில் தெரியும் கதைகள்.'' புகைப்படத்தில் இடமிருந்து வலமாக ஜி. கே. வெங்கடேஷ், ஏ. எல். ராகவன் (தயாரிப்பாளர்) கே. வி. மகாதேவன், இளையராஜா, டி. ஆர். பாப்பா (அகத்தியர்) சங்கர்-கணேஷ். — பிலிம்நியூஸ் ஆனந்தன்

''உட்கார்ந்து காப்பியைச் சாப்பிடு... லீவிலேதானே வந்திருக்கே? அந்த ஊர் உனக்குப் பிடிச்சிருக்கா? மறுபடியும் எப்போ போவே?....'' பலவும் விசாரித்தபடி சந்தோஷம் காப்பித் தம்ளரை மேஜையின் மீது வைத்தாள்.

மறுபடியும் அந்தத் தொய்ந்துபோன சோபாவில் உட்கார்ந்து கொண்டான். தம்ளரைக் கையில் எடுத்துக் கொண்டு நிமிர்ந்த போது பார்த்தான். தேவசகாயம் சட்டத்துக்குள் அடங்கி எதிர்பக்கத்துச் சுவரில் படத்தினின்று முறுவலித்தார்.

''எப்படியோ இருக்க வேண்டியவன் எப்படியோ இருந்துட்டே. ஆனாலும் மோசமில்லே. படிச்சு முன்னுக்கு வந்துட்டே. புத்திசாலி. பிழைக்கத் தெரிந்தவன். நான் சொன்னதையெல்லாம் மறக்காதே. ஞாபகத்தில் வச்சுக்கோ....'' கடைசிச் சந்திப்பில் அவர் சொன்ன வார்த்தைகள் மீண்டும் காதுகளில் ஒலித்தன.

முன்னறையிலேயே ஒரு மூலையில் சுவரோடு தள்ளி வைக்கப்பெற்றிருந்த பீரோவைத் திறந்து சந்தோஷம் ஒரு சிறு கடித உறையை எடுத்துக் கொண்டு வந்தாள்.

''உன்னைப் பத்தித்தான் ஐயா, கடைசி வரை அதிகம் பேசிக் கொண்டிருந்தார். பெத்த தமது பிள்ளைகளை விட உன் மேல் அவருக்கு அப்படி ஓர் அன்பு.'' துக்கத்திலே தடைப்பட்டது அவள் குரல். கடித உறையை அவன் எதிரே முக்காலி மீது வைத்தாள்.

''எப்பவோ உன்னிடம் நான் சேர்த்திருக்க வேண்டிய பொருள். தொடர்ந்து குடும்பத்தில் ஏற்பட்ட பல தொல்லைகளில் இதைப் பற்றிய நினைப்பே இல்லே. வீட்டை ஒழுங்கு படுத்தி வாடகைக்குக் கொடுக்கும் போதுதான் இது கையில் அகப்பட்டது. உடனே உனக்குக் கடிதம் எழுதிப் போட்டேன். உங்கம்மா ஆஸ்பத்திரியிலே உடம்பு முடியாமப் படுத்திருக்கப்போ என்கிட்ட இதைக் கழற்றிக் கொடுத்தாங்க. பத்திரமா வச்சிருந்து உனக்குத் தக்க வயசு வந்தபோது அவுங்க நினைப்பா வச்சுக்கச் சொல்லிக் கொடுக்கச் சொன்னாங்க. இது உன் தாயார் உனக்கு விட்டுப் போன ஆஸ்தின்னு நினைச்சுப் பத்திரமா வச்சுக்கோ...'' கூறிவிட்டு ஆயாசத்துடன் எதிரே ஓர் ஆசனத்தில் சாய்ந்து கொண்டாள்.

உறையைப் பிரித்து உள்ளே இருந்த ஒரு தங்க மோதிரத்தைக் கையில் எடுத்தான் காமேஷ்.

அதை அவன் தன் தாயின் கைவிரலில் ஒருபொழுதும் பார்த்ததில்லை. அப்படி ஒரு நகை அவளிடம் இருந்ததா? வியப்புடன் அதைக் கைவிரலில் போட்டுத் திருப்பிப் பார்த்தபோது அவன் முகம் இறுகிப் போயிற்று. மோதிரம் நெருப்பாகி விரலையும் உடல் முழுவதையும் சுட்டு விட்டது போன்று ஆத்திரத்தில் துடித்தான். அதைப் பார்க்கப் பிடிக்காது சட்டென்று கழற்றிச் சட்டைப் பையில் வைத்துக் கொண்டான்.

சிறிது பொழுதில் விடை பெற்றுக்கொண்டு கிளம்பினான். அங்கிருந்த ஒரு ஹோட்டலுக்குள் நுழைந்தான். காலை வேளையில் அங்கே கூட்டம் நிரம்பி வழிந்து கொண்டிருந்தது. ஒரு மூலையில் கிடந்த மேஜை அருகே காலி நாற்காலி ஒன்று கண்களில் பட்டது. வேகமாகச் சென்று அதைப் பிடித்துக்கொண்டான்.

அவன் கேட்ட பூரி உருளைக் கிழங்குடன் ஆவி பறந்த சூடான தேநீரைக் கோப்பையில் நிறைத்துக் கொண்டு வந்து ஹோட்டல் பையன் அவன் முன்னால் வைத்தான்.

அடுத்தபடியாக என்ன செய்ய வேண்டும் என்பதைப் பற்றி அவன் சிந்தித்தாக வேண்டும். ஆழ்ந்து யோசித்து முடிவெடுக்க வேண்டிய கட்டம் நெருங்கி விட்டது. அவனுக்குச் சிந்திக்கத் தனிமையும் அவகாசமும் பெரிதும் தேவைப்பட்டன.

மெல்லப் பூரியைப் பிட்டு உருளைக் கிழங்குடன் சேர்த்து வாயில் போட்டு மென்றபடி திறந்த ஜன்னல் வழியே தனது வருங்காலத்தை ஊடுருவிப் பார்த்துக்கொண்டு உட்கார்ந்திருந்தான்.

(தொடரும்)



நிருபர்: "உங்களைப் பற்றித் தவருன செய்தி எழுதினதற்காக வருந்துகிறேன்!"
நடிகை: "இது என்ன அந்த தவலை சில இசவுக்கு முன்னுரைதானா...?" — உ. ராஜாஜி

## வயலின் வாசிக்கும் கமல்

கமலஹாசன் சகோதரர்கள், "ஹாஸன் பிரதர்ஸ்" என்ற பெயரில் ஒரு நிறுவனத்தைத் தோற்றுவித்துப் படம் எடுத்து வருகிருர்கள். இத் திரைப்படத்தை சிங்கீதம் சீனிவாச ராவ் டைரக்ட் செய்கிருர். இப்படத்தில் கமலஹாசன் வயலின் வித்வாளுக நடிக்கிருர். பின்னணி சங்கீதமாக வயலின் ஒலிக்கும் போது சும்மா தந்திகளைத் தடவிக் கொண்டிருந்தால் போதாது. உண்மையாகவே வயலின் வாசிக்கத் தெரிந்து கொண்டு, இசைக்கேற்ப விரல்களைச் சரியானபடி அசைக்கவேண்டும் என விரும்பி கமலஹாசன் தற்போது வயலின் வாசிக்கக் கற்றுக் கொண்டு வருகிருர். சரளி வரிசை ஜண்டை வரிசையெல்லாம் முடிந்து இப்போது கீதம் வாசிக்கும் நிலை வரை வளர்ந்தாகி விட்டது!



அடுத்த வாரம்: BLOW UP
கபில்தேவ்



பிறை நிலா பக்கத்தில் காட்டியுள்ளது போல் இரவு நேரங்களில் தோன்றுவதுண்டா? நன்கு கவனிக்க வேண்டும்; வெளிச்ச வளைவு மேலே இருப்பதை. — யெஸ்பால்

விடை: பிறை நிலா இப்படி இரவு நேரங்களில் தோன்றுது. ஆனல் பௌர்ணமி நாட்களில் சந்திர கிரகணம் ஏற்படும்போது சில நேரங்களில் இப்படிப் பார்க்க முடியும்,



"உன் பேரு என்ன?"
"ரமா சார்."
"உன் அக்கா பேரு?"
"பூமா சார்."
தங்கையோட பேரு?"
"பாமா சார்."
"அப்படியா! அம்மா பேரு?"
"பத்மா சார்."
"அட! உன் அப்பா பேரு?"
"சாமா சார்."
"இவ்வளவு பேருதானு?"
"ஆமா சார்." — ஊ. குப்புசாமி

சிறு விளையாட்டு உங்களுக்கு: இதற்குத் தேவை கோலிக் குண்டுகள், ஒரு பெரிய பெட்டி. இந்த விளையாட்டை உங்கள் நண்பர்களுடன் விளையாடலாம். பெட்டியின் மேல் மூடியை நிராகரித்து விடுங்கள். பிறகு பெட்டியின் ஒரு பக்கத்தில் மேல் புறம் நான்கு வளைவுகளைக் கத்தரித்து விடுங்கள். வளைவுகளின் உயரம் ஓர் அங்குலம் இருக்கலாம். அகலம் ஓர் அங்குலம் இருக்க வேணும். தரையில் அந்தப் பெட்டியைத் தலைகீழாக வைக்கவும். ஒவ்வொரு வளைவு வாசலிலும் 5, 10, 15, 20 என்று எண்ணிக்கை இடவும். இப்பொழுது கோலிகளை அந்தப் பெட்டி வாசல்களுக்குள் உருட்டுங்கள். வாசலுக்குள் கோலி சென்றதும் எண்ணைக் குறித்து வைத்துக் கொள்ளுங்கள். ஏழு கோலிகளையும் உருட்டி அதிக ஸ்கோர் எடுப்பவர் யாரோ அவரே வெற்றி பெற்றவர்! — பி. எஸ். எம்.




## திடீரென சிவாஜி....!

சினப் படையெடுப்பின் போது நிதி திரட்ட இயக்குனர் ஸ்ரீதரும் சிவாஜியும் இணைந்து தமிழகத்தின் ஏழு மாவட்டத் தலைநகரங்களில் நட்சத்திர இரவு நடத்தினுர்கள். திருச்சியில் நட்சத்திர இரவின்போது அதில் கடைசி அம்சமாக இசை நிகழ்ச்சி இடம் பெற்றது. இக் கடைசி நிகழ்ச்சியில் விசுவநாதன் இசையமைத்த 'விசுவநாதன் வேலை வேணும்' என்ற பாடலை P. B. சீனிவாஸ் பாடிக்கொண்டிருந்தார். திடுமென பாட்டின் மத்தியில் சிவாஜிகணேசன் அரங்கில் தோன்றிப் பாட்டுக்குத் தகுந்தாற்போல் ஆட ஆரம்பித்து விட்டார். உடனே மற்ற நடிக நடிகைகளும் மேடைக்கு வந்து அவருடன் சேர்ந்து கொண்டார்கள்! ரசிகர்கள் பரவசப் பட்டுப் போனுர்கள். இதன் பிறகு மற்ற மாவட்டத் தலைநகரங்களில் நடைபெற்ற நிகழ்ச்சிகளில் இந்த இசைநடனம் ஒரு முக்கிய பங்கு வகித்து விட்டது. தகவல்: "பிலிம் நியூஸ்" ஆனந்தன்



# பொறியைத் தட்டியதுமே...




காம்ப்டாலக்ஸ் ஸ்பாட்லைட்
துணிகளின் டிசைன்களைத் தனித்
தெரியச் செய்கிறது—பார்ப்பவ-
ரைக் கவர்ந்திழுக்கும் வகையிலே.




உங்கள் வைரங்களிலே
மேலும் அதிக ஜொலிப்பு—
காம்ப்டாலக்ஸ்
ஸ்பாட்லைட் மூலம்.



PE—4365

காம்ப்டாலக்ஸ், எடுத்துப் பொருத்திடக் கூடிய, எத்தேவைக்கும் ஏற்ற ஸ்பாட்லைட். ஷேடுகளோ இணைப்புகளோ தேவையில்லை. பொருத்துங்களேன், பொறியைத் தட்டியதும், அதன் விற்கும் திறனை அறியலாமே!

PHILIPS

1879-1979
100 YEARS
ELECTRIC
LIGHT

# காம்ப்டாலக்ஸ்

எடுத்துப் பொருத்திடலாம், எத்தேவைக்கும் ஏற்ற ஸ்பாட்லைட்

**பிலிப்ஸ்**




அத்தியாயம் 16

## துலாஜி ஆங்கரே

கூனனைச் சுட்டுவிடும் நோக்கத்துடன் கட்டிலிருந்த இடத்திலிருந்து நாலைந்து அடிகள் முன்னேறி வந்து, கூனனின் உதடுகளிலிருந்து உதிர்ந்த கடும் சொற்களால் சட்டென்று நீட்டிய கைத் துப்பாக்கியை நீட்டியபடி நின்றுவிட்ட தளபதியும், சற்று எட்டக் கட்டிலுக்கருகிலேயே ஒரு புறமாகத் தலை சாய்த்து இடையில் கையைக் கொடுத்துக் கொண்டு நின்ற ராணியும், கூனனை உற்று நோக்கி அவன் யாரென்பதைப் புரிந்துகொண்டதன் விளைவாகச் செயலற்று நின்று விட்டார்களென்றால், இந்திரஜித் அனந்த் அந்த அறைக்குள் மட்டும் ஒலிக்கும்படியாக மிக லேசாக நகைத்தான். கூனன் மேஜை மீது உட்கார்ந்த நிலையிலிருந்து சற்றும் அசையாமலும், தான் மிரட்டியபடி தளபதியைச் சுட இடையிலிருந்த கைத்துப்பாக்கியைக் கூட எடுக்காமலும் அனந்தின் நகைப்பை ஆமோதிப்பது போல் புன்முறுவல் செய்தான்.

இந்திரஜித்தின் நகைப்பும் கூனனின் புன்சிரிப்பும் தளபதியின் ஆத்திரத்தை அதிகமாகக் கிளறிவிட்டாலும், கூனன் யார் என்பதை உணர்ந்து கொண்டதால் அந்த ஆத்திரத்தை எவ்விதத்திலும் செயல்படுத்த முடியாமல் திண்டாடினார். தந்தையின் திண்டாட்டம் மகளுக்குப் புரிந்ததால் ராணி தான் இருந்த இடத்திலிருந்து அறையின் நடுவுக்கு அதிகார தோரணையில் நடந்து வந்து கூனனை நோக்கினாள், நடையிலிருந்த அதிகாரம் கண்களிலும் விரிய. அதைக் கவனித்த இந்திரஜித் ராணியை நோக்கி ''ராணி! புலி என்னதான் பசுத் தோலைப் போர்த்திக் கொண்டாலும் அது தன் சுபாவத்தை மறைக்க முடிவதில்லையல்லவா?'' என்று கேட்டான்.

அவன் கேள்வியின் பொருள் அவளுக்கு நன்றாகப் புரிந்திருந்தாலும் அவள் உடனடியாகப் பதில் சொல்லாமல் கூனனையும் இந்திரஜித்தையும் மாறி மாறி நோக்கினாள். இருவரும் கிட்டத்தட்ட சம வயதுள்ளவர்களென்பதையும், இருவரும் தந்திரத்திலும் துணிவிலும் ஒருவரை யொருவர் மீறி நிற்க முடியுமே தவிர, மூன்றுமவர் யாரும் அவர்களுக்கு இணை இல்லையென்பதையும் புரிந்து கொண்டாள். தனது தந்தை கைத் துப்பாக்கியின் குதிரையை இழுக்க முற்பட்ட பின்பு கூட, இடையிலிருந்த கைத் துப்பாக்கியிடம் கையைக் கூடக் கொண்டு செல்லாமல் கூனன் காட்டிய துணிவை நினைத்து அவனுக்குச் சுய நம்பிக்கை அளவுக்கு மீறி இருக்க வேண்டுமென்று தீர்மானித்தாள். அவன் மேஜை மீது உட்-

கார்த்திருந்த அலட்சிய பாவமே அதற்கு அத்தாட்சி என்றும் உள்ளூறச் சொல்லிக் கொண்டாள் ராணி. ''ஆனால் இவருக்குக் கூன் எப்பொழுது ஏற்பட்டது?'' என்ற கேள்வியையும் எழுப்பிக் கொண்ட ராணி அதைக் கேட்க உதடுகளைச் சற்று அசைக்கத் தொடங்கியதுமே அனந்த் முந்திக்கொண்டு ''ராணி! இந்தக் கூன் இவனுக்குச் சமீபத்தில்தான் ஏற்பட்டது!'' என்று விளக்கினான் மெதுவாக.

'இவனுக்கு' என்று சர்வ சகஜமாகத் தோழனை அழைப்பது போல் கூனனை அனந்த் அழைத்ததை ராணி கவனித்தாளானாலும் அதை ஒரு பெரிய விஷயமாக ராணி நினைக்கவில்லை. தளபதியின் கூரிய அறிவுக்குக் கூட அதில் எந்தப் புதுமையும் இருப்பதாகப் படவில்லை. ஆகவே அவர் சொன்னார்: ''மகாராஷ்டிர கடற் படைத் தலைவரின் புதல்வருக்கும் அனந்துக்கும் நெருங்கிய நட்பு உண்டென்று மேலைக் கடலோரப் பகுதியில் உள்ள அனைவருமே அறிவார்கள்'' என்று.

''தளபதிக்கும் அந்த அறிவு இருப்பதைப் பற்றி மகிழ்ச்சி அடைகிறேன். எங்கள் நட்பில் ரத்னாவுக்கும் ஆட்சேபனை இருக்காதென்று நினைக்கிறேன்'' என்று கூறிய கூனன் தளபதியை விட ராணியையே அதிகமாக உற்று நோக்கினான்.

தன் சொந்தப் பெயரைச் சொல்லிக் கூனன் அழைத்ததைக் கேட்டதும் ராணியின் முகத்தில் மகிழ்ச்சியின் சாயை நன்றாகவே படர்ந்தது. அந்தப் பெயரை அதுவரை அறியாத அனந்தும் தனது நண்பனை வியப்பு நிரம்பிய விழிகளால் நோக்கினான். ''உங்கள் இருவருக்கும் ஏற்கனவே பரிச்சயம் உண்டு போல் தெரிகிறது'' என்று சொல்லவும் செய்தான். அந்தச் சொற்களில் மகிழ்ச்சி அதிகமில்லை. அவன் வேண்டா வெறுப்பாகப் பேசுவதாகத் தோன்றியது குரலிருந்த நிலை.

இம்முறை கூனன் நகைத்தான் மெல்ல: ''அனந்த் பொறாமைக்குக் காரணம் ஏதுமில்லை. உன் சொத்தை நான் திருட மாட்டேன். தவிர ராணியும் நானும் ஒரே ஒரு முறைதான் சந்தித்திருக்கிறோம். ஆகையால் பயப்படாதே'' என்று கூறவும் செய்தான் நகைப்பின் ஊடே.

''ஒரு முறைதான் சந்தித்திருக்கிறாய்; ஆனால் அவள் இயற்பெயர் உனக்குத் தெரிந்திருக்கிறது. இப்பொழுது ஒரே நாளில் பலமுறை நாங்கள் சந்தித்திருக்கிறோம். ஆனால் எனக்கு அவள் பெயர் தெரியாது. தெரிந்து கொள்ள வேண்டும் என்ற எண்ணம் கூட என் மனத்தில் எழவில்லை'' என்று சுட்டிக் காட்டினான் அனந்த்.

''எனக்குப் பெயர் மட்டும்தான் கிடைத்தது. உனக்கு அவள் இதயமே கிடைத்திருக்கிறதே'' என்று பதில் கூறிய கூனன் இரண்டாவது முறை நகைத்தான் மெதுவாக; அந்த இருவரும் தன்னைப் பற்றி விவாதிக்கத் தொடங்கிவிட்டதால் ராணியின் முகத்தில் சினம் அதிகமாயிற்று. பேசத் தொடங்கிய அவள் அழகிய உதடுகள் மிகக் கடுமையாக ஒருமுறை உட்புறம் மடிந்தன. பிறகு மலர்ந்த உதடுகள் உதிர்த்தன சொற்களை உஷ்ணத்துடன். ''துலாஜி ஆங்கரே! நான் யாருடைய சொத்துமல்ல. யாரும் என் இதயத்தைக் கவரவும் இல்லை. இந்த மாதிரிப் பேச்சு இன்னொரு முறை வெளி வந்தால் நீங்கள் கனோஜி ஆங்கரேயின் மகன்





தமிழ்ப் பட இசையமைப்பாளர் : "நீங்க ரீசண்டா இசை அமைத்து இருக்கிற படத்தில் ஹிட்டாகி இருக்கிற பாட்டின் மெட்டை என் படத்தில் போட்டுக்க உங்க அனுமதி வேண்டும்."

இந்தி பட இசையமைப்பாளர் : "கிட்ட வாங்க ஒரு ரகசியம் சொல்றேன். பத்து வருஷத்துக்கு முந்தி வந்த ஒரு தமிழ்ப்பட பாட்டிலிருந்துதான் நான் அந்த மெட்டைக் காப்பியடிச்சேன்!"

—பூபாலசிங்

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

என்பதையும் பாராமல் சுடத் தயங்க மாட்டேன். நீங்கள் என்னை விட வேகமாகச் சுடலாம். ஆனால் என் ரவை உங்கள் உடலில் பாயுமுன்பு நான் இறக்க மாட்டேன்" என்று சீறினாள் ராணி.

அந்தச் சீற்றத்திலும் அவள் முகம் மிக அழகாயிருப்பதை அனந்த் கண்டான். அழகுடன் அதில் வீரமும் இருப்பதையும் அவள் ஏதோ பெண் சிங்கம் போல் கம்பீரத்துடன் அறையின் நடுவில் நிற்பதையும் பார்த்த அனந்த், பாரதத்தின் கௌரவத்தைக் காத்த பல வீரப் பெண்மணிகளைத் தன் நினைவில் இருத்தியதன்றி, அவர்களோடு ராணியையும் ஒப்பிட்டு, அதனால் திருப்தியும் பெருமையும் அடைந்தான். அந்தப் பெருமை குரலில் துலங்க துலாஜியை நோக்கிச் சொன்னான்: "துலாஜி! ராணி, சொன்ன வார்த்தை தவறுபவளல்ல" என்று.

அதை ஒப்புக்கொண்டதற்கு அடையாளமாகத் துலாஜியும் தலையை அசைத்தான். "எனக்கு முன்பே தெரியும் ராணியுடன் விளையாடுவது ஆபத்து என்று. தெரியும் என்று சொல்வதை விடப் பார்த்தேன் என்று சொல்வது பொருந்தும்" என்றான் துலாஜி.

"பார்த்தாயா?" அனந்தின் கேள்வியில் வியப்பு இருந்தது.

"ஆம்." துலாஜியின் பதில் திட்டமாயிருந்தது.

"எங்கே?"

"பரசுராமபுரத்தில்."

"என்ன நடந்தது?"

"ஸித்தியின் வீரனொருவன் துணிவுடன் அணுகிவிட்டான் ராணியை. நடந்ததை நீ ஊகித்துக்கொள்."

"பரசுராமபுரத்தில் யாரும் ஆயுதம் எடுக்கக் கூடாதென்று விதி இருக்கிறதே!"

"இருக்கிறது."

"அப்படியிருக்க பிரும்மேந்திரஸ்வாமி சும்மா இருந்தாரா?"

"இல்லை. ராணியைத் தண்டித்தார்" என்று கூறினான் துலாஜி. "இரண்டு நாட்கள் உபவாசமிருக்கச் செய்தார்" என்று தண்டனையையும் விளக்கினான்.

இதைக் கேட்ட இந்திரஜித் அனந்தின் முகத்தில் சிறிது சந்தேகச் சாயை படர்ந்தது. "அஞ்சன்வேல் தளபதி ஸாத் ஸித்தி அங்கிருந்தாரா?" என்று வினவினான் அனந்த்.

"ஸாத் ஸித்தி இருந்தார். ஸ்வாமியிடம் புகாரும் செய்தார். ராணியைத் தண்டித்து விட்டதாக ஸ்வாமி கூறினார். ஸாத் ஸித்தி அந்தத் தண்டனையை ஒப்பவில்லை. வெகு கோபத்துடன் அஞ்சன்வேலுக்குப் புறப்பட்டுச் சென்றார்" என்றான் துலாஜி.

ராணியின் கண்களும் அனந்தின் கண்களும் ஒரு விநாடி சந்தித்து அகன்றன. "இன்றுகூட ராணியைக் கொல்ல பாண்டவகட் தென்னஞ்சோலையில் முயற்சி நடந்தது. கொல்ல முயன்றவன் ஸாத் ஸித்தியின் படைத் தலைவன் யாகூப்" என்று விளக்கினான் அனந்த்.

துலாஜியின் விழிகளில் சிரிப்பு உதிர்ந்தது. "புரிகிறது எனக்கு. ராணியைக் கொலை செய்ய ஸாத் ஸித்தி ஒருவனை அனுப்புகிறான். அவனை அழிக்க அரபிக்கடலின் மகாவீரன் ஒருவன் உதவுகிறான் ராணிக்கு. வந்தவனைச் சுட்டுவிடுகிறான். உடனே கதாநாயகி தன்னை மீட்ட அந்த வீரனைக் காதலிக்கிறாள்...." என்றான் துலாஜி.

அனந்த் உதடுகளில் புன்னகை விரிந்தது: "நன்றாகக் கதை சொல்கிறாய் துலாஜி. ஆனால் உன் கதையில் குறை இருக்கிறது. கதாநாயகன் சுடவில்லை. கொலை செய்ய வந்தவனைச் சுட்டவள் ராணி" என்று திருத்தினான் அனந்த்.

துலாஜி விடவில்லை. அந்தச் சம்பவத்தைப் பற்றி அனந்த் குறிப்பிட்டதுமே ராணியின் முகத்தில் வெட்கச் சிவப்பேறிவிட்டதைக் கவனித்த துலாஜி "ராணி சுட்டாலென்ன? கதாநாயகன் சுடாவிட்டாலும் ஏதாவது ஒரு வழியில் உதவியிருப்பான் ராணிக்கு" என்று கூறினான்.

'ஏதாவது ஒரு வழியில்' என்று துலாஜி சொன்னதைக் கேட்ட ராணியின் முகம் மிக அதிகமாகச் சிவந்தது. இந்திரஜித் அனந்த்கூடச் சிறிது சங்கடத்துக்கு இலக்கானான். அந்த வழி என்ன என்பதை உணர்ந்த இருவர் உள்ளத்திலும் தென்னஞ்சோலையும், அங்கு மணலில் இருவரும் புரண்ட காட்சியும் எழுந்து அவர்களை நிலை குலையச் செய்யவே, இருவரில் ராணி பேசாவிட்டாலும் அனந்த் சீற்றத்துடன் பேசினான். "துலாஜி! வர வர உன் கற்பனை அளவுக்கு மீறிப் போகிறது. இந்தக் கற்பனையே ஒரு காலத்தில் உனக்கு யமனாக வரும்" என்று கூறிய அனந்தை நோக்கி மீண்டும் நகைத்த துலாஜி "நான் நினைத்தது சரியாகப் போய் விட்டது" என்றான்.

"எது சரியாகப் போய்விட்டது?"—ராணி சீறினாள்.


மிகப் பொருத்தமான ஜோடி
இந்தியாவின் ஒரே துர்நாற்றமகற்றும் சோப் மற்றும் டால்க்
துர்நாற்றத்திலிருந்து உங்கள் உடலுக்கு இரட்டை பாதுகாப்பு. சிந்தால் சோப் குளியலும் பின் சிந்தால் பவுடர் தூவலும்—ஆகா! புத்துணர்ச்சியின் புதுச் சிகரத்தில் நீங்கள் இருப்பீர்கள்!
கோத்ரெஜ் வழங்கும் சிந்தால்
CINTHOL
DEODORANT LUXURY TOILET POWDER BY Godrej
Godrej
CINTHOL
DEODORANT AND COMPLEXION SOAP
CINTHOL
Interpub/CTS/1/79 TM

# நிகரில்லா வலிமைக்கு—ஏலே லோ
# நிர்லான் வலையிருக்கு—லேசுடா லேசு,
# நீடித்த உழைப்புக்கு—ஏலே லோ
# நிர்லான் வலையிருக்கு—வீசுடா வீசு !



# நிர்லான்

## நைலான் மீன்பிடி வலை மணிக் கயிறு

நிர்லான் ஸிந்தெடிக் ஃபைபர்ஸ் & கெமிக்கல்ஸ் லிட்.,

பதிவு அலுவலகம்:
"நிர்லான் ஹவுஸ்"
254—B, டாக்டர் அன்னி பெஸண்ட் ரோடு,
பம்பாய்-400 025

சென்னை கிளை:
300, மோப்ரேஸ் ரோடு
சென்னை—600 018

லின்டாஸ்-NIR-12-303 TM

''தென்னஞ் சோலையில் இவன் செய்த உதவி....'' இழுத்தான் சொற்களை துலாஜி.

அதற்கு மேல் பொறுக்காத தளபதி குறுக்கிட்டு, ''என் மகளைப் பற்றி அதிக மாகப் பேசுகிறீர்கள்'' என்றார். அவர் குரல் நடுங்கியது கோபத்தால்.

அவரை துலாஜி நோக்கினான், பரிதாபத் துடன். ''தளபதி கோபிக்கிறார் அனந்த்!'' என்று சொன்னான் இகழ்ச்சி குரலில் தாண்டவமாட.

அனந்த் தன் கையசைப்பினால் அவர்கள் விவாதத்தை நிறுத்தினான். ''நாம் நேரத்தை வீணாக்குகிறோம் துலாஜி. தளபதியை அழைத்துச் செல். அதை என்னிடம் கொடுத்துவிடு'' என்று கூறித் தனது இடது கையை நீட்டினான்.

துலாஜியின் இதழ்களில் அழகிய புன் முறுவல் அரும்பிற்று. அந்தப் புன்முறுவ லுடன் தனது கிழிந்த சட்டையின் உட் புறத்தில் கையை விட்டு ஒரு கசங்கிய காகி தத்தை எடுத்து அனந்தின் கையில் கொடுத்து விட்டு மேஜையிலிருந்து வெகு லாகவமாகக் கீழே குதித்தான். ''தளபதி வாருங்கள்'' என்று கூறிவிட்டுக் கதவை நோக்கி நடந்தான்.

தளபதி இருந்த இடத்தை விட்டு நகர வில்லை. அவர் முகத்தில் கவலை மிதமிஞ்சிப் படர்ந்தது. அதை நோக்கிய துலாஜி ''சங்கர்பந்த்! மகளைப் பற்றிக் கவலை வேண் டாம். இந்திரஜீத் அனந்தின் எதிரிகள்கூட அவன் மாசில்லாத நடத்தையைப் பற்றிப் பகர்கிறார்கள். அவன் பாதுகாப்பை விட இந்தக் கப்பலில் சிறந்த பாதுகாப்பு அவ ளுக்குக் கிடையாது. வாருங்கள்'' என்று கூறி நடந்தான்.

தளபதி ராணியை நோக்கினார். ''போய் வாருங்கள் அப்பா'' என்று திடமாக ராணியும் சொல்லவே வழி ஏதுமின்றித் தளபதியும் நடந்தார், கூனைத் தொடர்ந்து.

அவர்கள் கதவைச் சாத்திக் கொண்டு சென்றதும் ராணியை நோக்கிய அனந்த் அந்த முகத்தின் வெட்கச் சிவப்பைக் கண்டு அசந்து போனான். அந்தச் சிவப்பு அந்த அறையின் மூலையிலிருந்த விளக்கொளியில் அதிகச் சிவப்பாகத் தெரிந்தது. ''ராணி! அந்த விளக்கை எடுத்து வா'' என்று அனந்த் சொல்லவே ராணி மூலைக்குச் சென்று விளக்கை எடுத்து வந்து மேஜை மீது வைத்தாள்.

வைத்துவிட்டுத் திரும்பிச் செல்ல முயன்ற ராணியைக் கையைப் பிடித்து நிறுத்தினான் அனந்த். ராணியின் முகம் கோபத்தாலும் நாணத்தாலும் விளக்கொளியில் செக்கச் செவேலென்று பளபளத்தது. அவள் சிவந்த இதழ்களில் இருந்த நீரோட்டம் சிறந்த ரத்தினத்தின் சிவப்பையும் நீரோட்டத்தை யும் பரிகசிக்கும்படியாக இருந்தது. அவள் கையைப் பிடித்ததால் அவள் அதரங்கள் ஈரத்துடன் அசைந்தபோது இந்திரஜீத் தனது அறிவை இழந்தான். அந்த அதரங் களில் தனது ஒரு ஆள்காட்டி விரலை வைத்து லேசாகத் தடவினான். ''ரத்னா! என்ன அழகான, பொருத்தமான பெயர்!'' என்று அவன் உதடுகள் முணு முணுத்தன. அவள் உணர்ச்சிகள் வேகமாகச் சுழன்றன. விழிகள் தாழ்ந்தன நிலத்தை நோக்கி.

(தொடரும்)



## எம். ஜி. ஆர். பாடியிருக்கிறாரா?

✖ இதுவரை வெளிவந்த தமிழ்ப் பாடல்களில் (அதிக) நீளமான பாடல்: 'லவகுசா' படத்தில் பி. லீலா அவர்களும் பி. சுசீலா அவர்களும் பாடியுள்ள ''இருப்புகழின் தூய கதை இராமனின் கதையே....'' என்ற பாடல். இப்பாடல் ஏறத்தாழ 16 நிமிடங்களுக்கு மேல் ஒலிக்கிறது.

✖ குறைந்த நேரத்தைக் கொண்ட சிறிய பாடலும் உள்ளது! அது, 'ஊருக்கு உழைப்பவன்' படத்தில் ஜேசுதாஸ் அவர்கள் பாடியுள்ள ''இரவுப் பாடகன் ஒருவன் வந்தான்...'' என்ற பாடல். இப்பாடல் இரண்டரை நிமிடங்கள் மட்டுமே ஒலிக்கிறது.

✖ இதுவரை வெளிவந்த தமிழ்ப் படங்களில் அதிகமான பாடல்களைக் கொண்டுள்ள படம் 'ஔவையார்'.

✖ அதிகப்பேர் குரல் கொடுத்துப் பாடிய படம்: 'வருவான் வடிவேலன்' படத்தில் இடம்பெற் றுள்ள ''பத்துத் திங்கள்....'' என்ற பாடல். இப்பாடலில் குரல் கொடுத்துள்ளவர்கள்: சீர்காழி எஸ். கோவிந்தராஜன், டி. எம். சௌந்தரராஜன், எம். எஸ். விஸ்வநாதன், பெங்களூர் ரமணி அம் மாள், பி. சுசீலா, எல். ஆர். ஈஸ்வரி ஆகியோர்.

✖ இந்தியத் திரைப்பட உலகில் அதிகமான பாடல் களைப் பாடியுள்ளவர் திருமதி லதா மங்கேஷ்கர்.

✖ ஒரு இசையமைப்பாளர் இசையமைப்பில் மற்றொரு இசையமைப்பாளர் பாடியுள்ள தமிழ்ப் பாடல் எது?

விடை: வி. குமார் இசையமைப்பில் எம். எஸ். விஸ்வநாதன் பாடியுள்ள பாடல் 'வெள்ளி விழா' படத்தில் ''உனக்கென்ன குறைச்சல்....'' என்ற பாடல்.

✖ 'அசோககுமார்' படத்தில் எம். ஜி. ஆர். சொந்தக் குரலில் பாடியுள்ளதாக ஒரு பத்திரிகையில் பல வரு டங்களுக்கு முன் செய்தி வெளியாகியிருந்தது. ஆனால் அப்பாடலை ஒரு வானொலி நிலையத்திலிருந்துமே கேட்க இயலவில்லை.

✖ ஒரே வார்த்தைகளைக் கொண்டு ஆரம்பிக்கும் திரைப்படப் பாடல்களை அதிகம் ஒலிபரப்புவது கோவை வானொலி நிலையமே. வாரந்தோறும் சனிக் கிழமைகளில் காலை 8-20. முதல் 9 மணிவரை இப்பாடல்களை ஒலிபரப்புகிறது.

✖ தமிழ், இந்தி, தெலுங்கு, மலையாளம், கன் னடம் இப்படிப் பல மொழிகளிலும் பாடல்களைப் பாடுபவர் வாணி ஜெயராம்.

✖ கலைஞர் கருணாநிதி எழுதிய பாடல்களில் நம் நெஞ்சை விட்டு அகலாத தமிழ்ப் பாடல் ஒன்று உண்டு. அது 'மறக்க முடியுமா?' என்ற படத்தில் பி. சுசீலா பாடிய ''காகித ஓடம் கடலலை மீது...'' என்ற பாடல்.

—கோவை ஜெயகுமார்


Parryware
VITREOUS
Superfine
Sanitaryware
Parryware is among the finest sanitaryware in the world. The best architects will agree with us.
AVAILABLE IN GLEAMING WHITE AND IN SIX GENTLE PASTEL SHADES.
E.I.D.- Parry (India) Limited
Ceramics Division
Dare House
MADRAS 600 001

போட்டிக்கதை.9



# இதமுள்ள நெஞ்சு...

## ஏ.என்.பட்டுலிங்கம்

அனுமிரண்டு போய் என்னைப் பார்த்தாள். ''பெங்களூருக்கா? ஐயையோ... வேண்டாங்க'' என்று மறுத்தாள்.

''ஏன்? பெங்களூரில் உனக்குத் தெரிந்தவங்க யாராவது இருக்காங்களா?'' என்று கேட்டேன்.

''அதுக்கில்லே....'' என்றவள் சற்று யோசித்து, ''கோபால் லீவு கிடைச்சப்ப எல்லாம் பெங்களூர் போறதா சொல்லிக்கிட்டு இருப்பார் இல்லே? அங்கே அவர் சொந்தக்காரங்க யாரோ இருக்காங்கன்னு நினைக்கிறேன். மூணு நாள் சேர்ந்தாப்பலே லீவு வருது... நாம போறப்ப அவரும் வந்துட்டார்னா?'' என்று கேட்டாள்.

நான் சிரித்தேன். ''கோபாலுக்குச் சொந்தக்காரங்க யாரும் பெங்களூரில் இல்லே... அவன் அங்கே போறது 'தண்ணி' போடறதுக்காக. பயப்படாதே. இந்த வாரம் கேரளா போறதாச் சொல்லியிருக்கான்.''

ஆனால் அவள் மீண்டும் ''எனக்கென்னவோ பயமாயிருக்குங்க. வேறே எங்கேயாது போகலாமே?'' என்றாள்.

நான் எரிச்சலுடன் அவளைப் பார்த்தேன். ''ஆல் ரைட். நாம நேரே இமயமலைக்குப் போயிடலாம். மூணு நாள் லீவிலே நம்ம ஆபிஸிலிருந்து யாரும் செலவழிச்சுக்கிட்டு அவ்வளவு தூரம் வரப்போறதில்லே'' என்று கூறிக் கோபத்துடன் எழுந்து வந்துவிட்டேன். ஏன் இந்தக் கோபம்? காரணம் இதுதான்...

என் நண்பன் மூர்த்திக்கு எல்லா மட்டத்திலும் நண்பர்கள் உண்டு. அவனுடைய அடிமட்ட நண்பர்கள் சிலர் திடீர் திடீரென்று எவளாவது ஒருத்தியை அழைத்து வந்து நிறுத்துவார்கள். இவனும் தான் ஓர்



## அறிமுக எழுத்தாளர்

ராமர் தடவி அணில் கோடு பெற்ற மாதிரி என் இந்தக்கன்னி முயற்சிக்கு ஆதரவு தந்து என்னையும் ஓர் எழுத்தாளனாக அங்கீகரித்த உங்கள் அன்புக்கு என் நன்றி. நான் மேல்நாட்டு இலக்கியம் அதிகம் படித்தவனல்ல. ஏன், உள்நாட்டு இலக்கியத்திலேயே நான் படித்தது குறைவு. இருப்பினும் அதைப்பற்றி ஓரளவு தெரியும். தங்களின் இந்த ஆதரவு என் எழுத்துத்துறைக்கு விஸ்தரிக்க ஓர் 'இன்ஸ்பிரேஷன்' ஆக அமையும். எனக்குச் சொந்தஊர் கோவை மாவட்டம் திருப்பூர். -பட்டுலிங்கம்

---

ஆபீஸில் வேலை செய்யும் கௌரவஸ்தன் என்பதை யெல்லாம் விட்டு விட்டு அவர்களோடு போய் அனுபவித்துவிட்டு வருவான். என்னையும் சில சமயங்களில் கலந்து கொள்ளச் சொல்வான்.

''போடா போ. உன்னை மாதிரி செக்லைச் கடைச் சரக்காக நினைக்க என்னால் முடியாது. எனக்கு செக்ஸ் என்பது ஒரு முழுக் கச்சேரி மாதிரி அமையணும். பூ மலர்ற மாதிரி இயல்பா இருக்கணும். உன்னை மாதிரி 'இன்ஸ்டன்டா' என்னால ரெடியாக முடியாது'' என்று மறுத்துவிடுவேன்.

அப்படித்தான் போன வாரம் ஒரு நாள் நான் சொன்னபோது, ''நான் சென்ஸ். இது கையாலாகாதவன் பேசற பேச்சு. நான் சாலெஞ்ச் பண்றேன். முன் பின் தெரியாதவ கூட வேண்டாம். உன்னை லவ் பண்றதாகச் சொன்னியே உங்க ஆபீஸ் ஸ்டெனோ — அனுவா அவ பேரு? — அவளையாவது வெளியில அழைச்சிக்கிட்டு வர தைரியம் உண்டா?''என்று கேட்டு விட்டான்.

நான் விடுவிடுவென்று அனுவிடம் வந்து, மூர்த்தி சவால் என்று ஏதும் சொல்லாமல் அவளை வெளியூருக்கு வரச் சம்மதிக்க வைத்தேன். இன்னும் சில தினங்களில் என் மனைவியாகப் போகிறவள்தானே அவள்? ஆனால் இப்போது திடீரென்று ஜகா வாங்கினால் அவள் என்றால் கோபம் வராதா?

ஆனால் என் கோபத்தின் ஆயுள் இருபத்து நாலு மணிநேரம்தான். மறுபடியும் மறுநாள் உணவு இடைவேளையின்போது வழக்கம் போல் சந்திக்கும் வரைதான். இது அனுவுக்கும் தெரியும். எனவேதான் நான் மறு

நான் ஏதும் பேச ஆரம்பிக்கும் முன்பே அவள் பெங்களூர் வரச் சம்மதம் தந்தாள்.

நான் பெங்களூரை செலக்ட் செய்யக் காரணம் உண்டு.

எங்கள் கம்பெனிக்குப் பெங்களூரில் அவென்யூ ரோட்டில் ஒரு பிராஞ்ச் ஆபீஸ் உண்டு. 'ஸ்டேஷனரி' ஐட்டங்களுக்கு ஒரு வருடத்துக்கான 'இன்டென்ட்' போட்டு எங்களுக்கு அனுப்பிவிடுவார்கள். நாங்கள் ஹெட் ஆபீஸிலிருந்து பிரின்ட் செய்து அனுப்புவோம்.

நான் என் திட்டத்தை விவரித்தேன்: ''அனு! நம்ப கம்பெனியிலிருந்து டூர் போறதாச் சொல்லி வீட்டிலே பர்மிஷன் வாங்கிவிடு. உனக்கு நம்ம பெங்களூர் பிராஞ்சிலிருந்து இன்டர்வ்யூவுக்கு வரச் சொல்லியிருக்கிற மாதிரி அவங்க லெட்டர் ஹெட்டிலே ஒரு லெட்டர் டைப் பண்ணி விடுவோம். நானே பிராஞ்சு மானேஜர் மாதிரி ஏதோ ஒரு கையெழுத்துப் போட்டு விடுகிறேன். பெங்களூருக்கு எதற்காக வந்திருக்கோம்னு லாட்ஜிலோ வெளியிலோ யாராவது கேட்டாலும் ஒரு ரீசன் சொல்றதுக்காகவாவது உதவியா யிருக்கும். என்ன சரிதானே?''

அவள் பதில் சொல்லாமல் என்னைப் பிரமிப்புடன் பார்த்தாள். இப்படி குயுக்தியாகக்கூட ஒரு மூளை வேலை செய்யுமா என்று அவள் ஆச்சரியப்பட்டிருக்கலாம்.

நான் அதைப் பற்றிக் கவலைப்படவில்லை. உள்ளுக்குள் கறுவிக் கொண்டேன். 'மூர்த்தி, பாருடா மடையா... ஓர் அழகான பெண்ணோட போகப் போறேன். அதுவும் உள்ளூர் கூட இல்லேடா... வெளியூருக்கு.'

ஐலண்ட் எக்ஸ்பிரஸிலிருந்து இறங்கிப் பெங்களூரில் கால் வைத்ததும் எனக்கு மீண்டும் மூர்த்தியின் ஞாபகம்.

'மூர்த்தி! 'தில்' கிடையாதுன்னு சொன்னான்?'

ஆனால் ஸ்டேஷனை விட்டு வெளியே வந்த உடனே தொடை நடுங்க ஆரம்பித்து விட்டது.

பிரமச்சாரியாய் இருந்து கொண்டு வெளியூரில் பகலில் ஒரு பெண்ணை வெளியில் அழைத்துக் கொண்டு போயிருக்கிறீர்களா? அதைவிடக் கொடுமையான அனுபவம் வேறு இருக்க முடியாது.

நானும் அனுவும் எங்களை அறியாமலே சிறிது இடைவெளி விட்டு நடந்துகொண்டிருந்தோம். எங்களுக்குள் முழு 'என்டேன்ஜ்மெண்ட்' இல்லை என்று காட்டுகிற மாதிரி. ரோட்டில் போகிறவர்கள் எல்லாம் எங்களையே பார்க்கிற மாதிரி எனக்குள் ஓர் உறுத்தல். அதற்கேற்றாற்போல் எப்போதும் வளவளவென்று பேசும் இந்த அனுக்கூடன்காரியும் 'உம்'மென்று வந்துகொண்டிருந்தாள். நான் எப்போதுமே அதிகம் பேசுகிறவன் இல்லை.

''நாம திருட்டுத்தனமா வந்ததை பப்ளிசிட்டி பண்ற மாதிரி இருக்கு நீ இப்படி உம்முனு வர்றது.... ஏதாவது பேசேன்'' என்றேன் மெல்ல.

''என்னத்தைப் பேசறது? எனக்கு உங்களை விட பயமாயிருக்கு!''

திடீரென்று எனக்குள் ஓர் உத்வேகம்: 'நான் யாரை வேண்டுமானாலும் இழுத்துக் கொண்டு எங்கே வேண்டுமானாலும் போவேன் என் இஷ்டம். இவர்கள் யார் என்னைக் கேட்பதற்கு?'

இந்த எண்ணம் தந்த தைரியத்தில் அவளோடு ஒட்டியபடி நடந்தேன் — பலவந்தமாக அவள் கையையும் இழுத்து என் கையோடு இணைத்துக் கொண்டு.

இந்தத் தைரியம் ஒரு பத்தடி நடக்கும் வரைதான். பின்னால் யாரோ பலமாகத் தும்மிய போது சடாரென்று கையை விடுவித்துக் கொண்டு என்னையறியாமல் விலகி நடக்க ஆரம்பித்தேன்.

கஷ்டமடா சாமி!

'மூர்த்தி!' என்று பல்லைக் கடித்தேன்: 'உன்னால் எவ்வளவு தொல்லையடா!'

ஒருவழியாகக் கொஞ்சம் டீசண்டாகத் தோற்றமளித்த ஒரு லாட்ஜுக்குள் நுழைந்து கவுண்டருக்குப் போனோம்.

ஹிந்தி படத்தில் வரும் அப்பா போல இருந்த புக்கிங் கிளார்க் மூக்கின் மேலிருந்த கண்ணாடிக்கு மேலாக என்னைப் பார்த்தார், அனுவைப் பார்த்தார்; மீண்டும் என்னைப் பார்த்தார். ''ரூம் இல்லே'' என்றார் சிக்கனமாக.

நாங்கள் (நானும் அனுவும்) ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டோம்.

''நோ.... நீங்க அப்படிச் சொல்லக் கூடாது. நாங்க கோயமுத்தூர்லேருந்து வர்றோம். வழியிலே கேட்ட போது இந்த லாட்ஜ்தான் டீசண்டான இடம் என்று சொன்னாங்க. நாளைக்கு இவளுக்கு ஒரு இண்டர்வியூ. மற்றபடி நோ மிஸ்பிஹேவியர்'' என்று அவர் கேட்காமலே இண்டர்வியூ லெட்டரை எடுத்துக் காட்டினேன்.

அவர் அதைப் பிரித்துப் பார்த்தார். கடிதத்துக்கு மேலே மீண்டும் என்னைப் பார்த்தார்.

''யெஸ்? எனி திங் ராங் இன் இட்?'' என்றேன். ஆங்கிலம் கைகொடுக்கும் என்ற எண்ணத்தில். கிழவர் அசந்து விட மாட்டாரா?

இல்லை. கிழவர் அசரவில்லை. ''நதிங் ராங். ஐ ஜஸ்ட் வாண்டட் டு செக் தி போனஃபைட் ஆஃப் யுவர் ஸ்டேட்மெண்ட்'' என்றார்.

எங்கள் பொறுமையைச் சோதித்து விட்டுக் கடைசியில் பெயர், விலாசம் எல்லாம் எழுதிக் கொண்டு அட்வான்ஸையும் வாங்கிக் கொண்டு ரூம் சாவியைக் கொடுத்தார். ''ரூம் நெம்பர் முப்பத்தொன்பது. முதல் மாடியிலே வலது பக்கம் ரெண்டாவது ரூம்.''

அறைக் கதவைத் திறந்து ஃபானைப் போட்டுவிட்டுக் கட்டிலில் அப்பாடா என்று உட்கார்ந்த போது நிம்மதியாயிருந்தது.

கொஞ்ச நேரம்தான்.

பால்கனியில் நின்று வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்த அனு அவசரம் அவசரமாக உள்ளே வந்தாள். நான் பதறிப் போய், ''என்ன அனு?'' என்று கேட்டேன்.



லேட்டீபூ ஷிக் கச்சேரியின்போது பாடகரிடம் ஒரு குறிப்பிட்டபாட்டை ஆறுதடவைகள் திரும்பத் திரும்பப் பாடச் சொன்னார்கள். பாடகர் மகிழ்ச்சியுடன் பாடினார்.

ஏழாவது தடவையாகப் பாடச் சொன்னபோது தமக்கு மறுபடியும் பாடுவதற்குச் சக்தியில்லை என்றார்.

''சரியாக அந்தப்பாட்டைப் பாடும் வரை விட மாட்டோம்'' என்றார்கள் ரசிகர்கள்.

-பிரேமா அரவிந்தன்

♦◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊♦

''வெளியே யாரோ ஒரு ஆளு நீங்க கோயமுத்தூரான்னு கேட்டார். நான் 'ஆமாம்'னேன். அவரு ''அதான். பார்த்தாலே தெரியுது'ன்னு சொல்லிட்டுப் போறார். புக்கிங் கிளார்க் செக் அப் பண்றதுக்காக போன் பண்ணி நம்ம பிராஞ்சிலேர்ந்து யாராவது வந்திருப்பாங்களோ? எனக்கென்னவோ அந்த ஆளு நம்ம கோயமுத்தூர் ஆபீஸுக்கு வந்திருக்கிறதாத் தோணுது'' என்றாள் மூச்சு விடாமல்.

நான் அவளை ஆசுவாசப் படுத்தினேன்: ''நீ ரொம்பப் பயந்து போயிருக்கே... பெங்களூருக்கு வர்றவங்க முக்கால்வாசிப் பேர் கோயமுத்தூர்க்காரங்கதான்.. அந்த ஆளு சும்மா காஷுவலா விசாரிச்சிருப்பான்'' என்று அவளுக்கு ஆறுதல் சொன்னாலும் பயம் இப்போது என்னையும் தொற்றிக் கொண்டது.

அவன் யாராயிருக்கும்? இவ்வளவு பெரிய ஊரில் இவ்வளவு பெரிய லாட்ஜில் குறிப்பாக எங்களை ஏன் விசாரிக்க வேண்டும்?

கேள்வி மேல் கேள்விகள். பேசாமல் ஊர் திரும்பி விடலாமா?

சே! மூர்த்தி என்ன நினைப்பான்? மூர்த்தி கிடக்கட்டும். இந்த அனுவே இவ்வளவு தூரம் வந்து சும்மா திரும்பிப் போனால் இவர் என்ன ஆண்பிள்ளை என்று நினைத்துக் கொள்ள மாட்டாளா?

இந்த எண்ணத்தோடு தான் இரவு அவளை நெருங்கி அணைத்துக் கொண்ட போது அறைக் கதவு தட்டப்பட்டது. மறுபடியும் அவனாக இருக்குமோ? 'ஜஸ்ட் எ மினிட் ப்ளீஸ்' என்று கூறியவாறு கதவைத் திறந்தேன். எனக்கு மூச்சே நின்று விடும் போலாயிற்று.

போலீஸ்!

எனக்கு மேலெல்லாம் வியர்த்துக் கால்கள் திடீரெனச் சக்தியற்றவை போல் துவண்டது.

எச்சிலைக் கூட்டி விழுங்கிக் கொண்டு, ''யெஸ்....?'' என்றேன்.

நினைவு அஞ்சலி



தோற்றம் : 18-11-1906

மறைவு : 28-10-1978

கல்யாண் கல்கி ஏஜெண்டும் M/s S.R.V. Nath & Coவின் உரிமையாளருமான மதிப்பிற்குரிய திரு. K. நடராஜன் அவர்கள் எங்களை விட்டுப் பிரிந்து 16-11-1979ல் முதல் ஆண்டு நிறைவு பெறுகிறது. எங்கள் குடும்பத்தின் குல விளக்காகத் திகழ்ந்த அவர்களின் பாதக் கமலங்களில் எங்கள் நினைவு அஞ்சலியை மலராக சமர்ப்பிக்கின்றோம்.

மனைவி கமலா, குழந்தைகள்

கருணை இலா ஆட்சி கடுகி ஒழிக!
அருள்நயந்த நன்மார்க்கர் ஆள்க! -தெருள்நயந்த
நல்லோர் நினைத்த நலம்பெறுக! நன்றுநினைத்து
எல்லோரும் வாழ்க இசைந்து!

— திருஅருட்பா

வெளியே நின்ற போலீஸ் அதிகாரி புருவத்தை இடுக்கிக் கொண்டு என்னைப் பார்த்தார். அனுவைப் பார்த்தார்; மீண்டும் என்னைப் பார்த்து. ''வேர் ஆர் யூ கமிங் ஃப்ரம்?'' என்று கேட்டார்.

நான் பதில் சொல்ல வாயெடுப்பதற்குள் பின்னாலிருந்து லாட்ஜ் பணியாள், ''ஸார், இந்த ரூம் இல்லே அடுத்த ரூம்'' என்று கன்னடத்தில் கூறுவது கேட்டது.

அவர் எங்கள் அறை எண்ணைப் பார்த்தார். கையிலிருந்த டைரியைப் புரட்டிப் பார்த்துவிட்டு ''ஸாரி ஃபார் தி டிஸ்டர்பன்ஸ் ஸார்.'' என்று கூறி அடுத்த அறையை நோக்கிச் சென்றார், தம்முடன் வந்த மேலும் இரு கான்ஸ்டபிள்களுடன்.

நான் பணியாளை விசாரித்தேன்.

யாரோ கடத்தல் கோஷ்டியைச் சேர்ந்த ஒருவன் இந்த லாட்ஜில் முப்பத்தெட்டாம் எண் அறையில் தங்கி யிருப்பதாகப் போலீஸில் தகவல் கிடைத்து வந்திருக்கிறார்கள். ''தவறாதலா உங்க ரூம் நெம்பரை மேனேஜரிடம் சொல்லிவிட்டார். ஸாரி ஸார்'' என்று கூறி விட்டுக் கீழே இறங்கிப் போனான். நான் பால்கனிக்குச் சென்று சுவரில் கைவைத்தபடி கீழே 'ஆக்டோபஸ்' மாதிரி விரிந்து பரவும் ஜலந்திரனை வெற்றிப் பார்வை பார்த்தபடி நின்று நடந்தவைகளை மீண்டும் எண்ணிப் பார்த்தேன்.

யோசித்தேன். சாதாரணமான நிகழ்ச்சிகள் கூட எங்களை ஏன் அச்சுறுத்த வேண்டும்? காஷுவலான விசாரிப்புக்கள் கூட ஏன் எங்களுக்கு மட்டும் வேவு பார்க்கும் கேள்விக் கணையாகத் தெரிய வேண்டும்? எங்கோ போக வேண்டிய போலீஸ் அதிகாரி ஏன் எங்கள் கண்ணில் பட்டு மனத்தைச் சஞ்சலப் படுத்தவேண்டும்?

ஏன் என்றால் நாங்கள் தப்பு செய்ய வந்தவர்கள்; தப்பு என்று தெரிந்தும் செய்ய வந்தவர்கள்.....

உண்மைதான்.... 'ஸெக்ஸ்' என்பது பெரிய விஷயம்தான். அதைப் பூரணமாக உணர்ந்து கொள்ள, அனுபவிக்க, ஆரோக்கியமான உடல் இருந்தால் மட்டும் போதாது; பயமில்லாத நேர்மையான ஆரோக்கியமான மனசும் வேண்டும்.

மூர்த்தி எக்கேடும் கெடட்டும். என்ன வேண்டுமானாலும் என்னைப் பற்றி நினைத்துக் கொள்ளட்டும். என் ஆண்மையைப் பற்றி எனக்குத் தெரியும். அதை அவனுக்கு நிரூபிக்க வேண்டிய அவசியம் எனக்கு இல்லை.

உள்ளே கட்டிலில் படுத்து விசித்துக் கொண்டிருந்தாள் அனு. அவளுடைய விசிப்பு ஓய்ந்ததும் அவளிடம் என் மனத்தில் இருந்ததை எல்லாம் கொட்டித் தீர்த்தேன். பிறகு சொன்னேன்: ''அனு! இன்னும் இரண்டே மாசம் பொறுத்துக் கொள். நாம் இருமணம் செய்து கொண்டு மீண்டும் இதே ஊருக்கு வருவோம். வந்து, இதே லாட்ஜில் தங்குவோம். எல்லோரையும் நிமிர்ந்து பார்த்து வாழ்க்கையை அனுபவிப்போம். ஆனா இப்போ என்னை மன்னிச்சுடு. என்னைப் பத்தித் தப்பா நினைக்க மாட்டேன்னு நினைக்கிறேன்.''

''இல்லவே இல்லேங்க. உங்களை பத்தித் தப்பாவே நினைக்கலே. இன் ஃபாக்ட் நானே அதைத்தான் சொல்லணும்னு நினைச்சேன். புறப்படுங்க. இப்பவே ஊருக்குப் போகலாம்' என்று எழுந்தாள்.

நான் சிரித்தேன். ''நாளைக்கு உனக்கு இண்டர்வியூ இருக்கிறதா கூறியிருக்கோம். நாடகத்தை முழுசா நடத்திட்டு நாளை மத்தியானம் புறப்படுவோம். அதுவரை ரெண்டு பேருக்கும் தனித் தனி கட்டில். ஓகே?''

''ஓகே!'' என்றாள் அவள் புன்னகைத்தபடி.



## திரைப்படப் பாடல்களில் இலக்கியம்

திரைப்படம் பாடல்களுக்கு இலக்கிய மதிப்பு உண்டா என்பது சுவையான வாதப் பொருள். ஆனால் கட்டாயம் உண்டு என்று நிரூபிக்கும் பல பாடல்கள் உண்டு.

பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம் 'கல்யாணப் பரிசு'க்காக எழுதிய ''காதலிலே தோல்வியுற்றாள் கன்னி ஒருத்தி'' என்ற பாடல் குறிப்பிடத் தக்கது. 'ஆசையிலே பாத்தி கட்டி அன்பை வளர்த்தான்' என்ற அடிகள் மறக்க முடியாதவை.

கவிஞர் கண்ணதாசன் திரையுலகுக்கு வந்த பின்தான் திரைப்படப் பாடல்களுக்கே ஒரு பெருமையும் மிடுக்கும் ஏற்பட்டன என்பதை அவரது விரோதிகள் கூட மறுக்க முடியாது.

'மீண்ட சொர்க்கம்' படத்தில் ''கோவில் கண்டேன் அங்கு தெய்வமில்லை ஓடிவந்தேன் இங்கு நீ இருந்தாய்'' என்ற அடிகள், ''மன நாட்டிய மேடையில் ஆடினேன்'' என்ற பாடல், ''நெஞ்சிலோர் ஆலயம் நிலைத்து வாழும் ஆலயம்'' என்ற பாடல் - இப்படிக் கருத்து முத்துக்களாகக் கவிதை வடித்தவர் அவர்.

கவிஞர் சுரதாவின் ''அமுதும் தேனும் எதற்கு'' என்ற பாடல் இலக்கிய நயம் செறிந்தது.

சமீபத்தில் பிரபலமாகியுள்ள ''உச்சி வகிடெடுத்துப் பிச்சிப்பூ வைத்த கிளி'' என்ற 'புலமைப்பித்தன்' பாடல் நாடோடிக் கவிதை இலக்கியத்துக்கு அணி செய்யும் பாடலாகும்.

பல ஆண்டுகளுக்கு முன் கல்கி அவர்கள் எழுதிய 'மீரா' படப் பாடல்களில் ''காற்றினிலே வரும் கீதம்'' குறிப்பிடத்தக்கது. மேலும், ''லீலைகள் செய்வானே - கண்ணன் மாயைகள் புரிவானே'' என்ற பல்லவியுடன் கூடிய ஒரு கோஷ்டி கானப் பாடல். அதில் வரும் அடிகள்:

''சங்கரன் வந்தான் இந்திரன் வந்தான் சந்திர சூரியர் வந்தார்.

அங்குமிங்குமாய் ஐயனைத் தேடி

ஆயர் மனைதனில் கண்டார்!'

''பிருந்தாவனத்தில்'' என்று தொடங்கும் இன்னொரு பாடலில்,

புனிதன் மேனியில் புழுதியும் கண்டு

வானோர் பூமியை விழைந்ததும் உண்டு - அந்த நாளும் வந்திடாதோ'' என்ற அடி பக்தியும் இலக்கியமும் கலந்து பரிணமிப்பதாகும். ஆழ்வார்கள் தொட்ட இறையுணர்வை இப்பாடல்களும் தொட்டன.

-இரா. சுராஜ்



# வீணையடி, நீ எனக்கு!

வாதூலன்

''இந்த டுயட்டை விரும்பிக் கேட்டிருக்கும் நேயர்கள்...'' என்று ரேடியோவிலிருந்து அறிவிப்பு வந்தவுடனேயே அதைப் படக்கென்று வசுமதி எரிச்சலுடன் மூடினாள். மனசுக்குள் ஓர் ஆயாசம் பொங்கிப் பரவியது.

இத்தனைக்கும் வசுமதி ஓர் அவுரங்கஸீப் ரகத்தைச் சேர்ந்தவள் அல்ல. இசையில் விருப்பமும் நாட்டமும்கொண்டவள். வீணை கற்றுக் கொண்டு அதில் பாடாந்தரமும் பெற்றுக் கச்சேரி செய்யும் அளவுக்குத் தேர்ச்சி பெற்றவள். அதற்காக மெல்லிசை சங்கீதத்தை வெறுத்தவளும் இல்லை.

இருந்தும் கூட...

நன்றாக ஞாபகம் இருக்கிறது. வீணை வாசிப்பதில் நன்றாகப் பயிற்சி வருகிறது என்று தெரிந்ததும், அப்பா ரொம்பவும் சிபார்சு பண்ணி அவளைப் பிரபல வித்துவானிடம் கொண்டு சேர்த்து ஊக்குவித்தார். அப்போது அவளுக்கு இருபது வயசிருக்கும்.

''நான் இதோடு நிறுத்திவிடுகிறேன். அப்புறம் கல்யாணமானால் சிரமப்படுவேன்!'' என்றாள் வசுமதி.

''நீ ஏன் சிரமப்படணும்? உன் கணவனுக்கல்லவா சிரமம்? தினமும் உன் டொய்ங் டொய்ங்கைக் கேட்டுக்கொண்டிருக்கணுமே!'' என்று அப்பா ஜோக் அடித்தார்.

''அதைச் சொல்லலை. ஒருவேளை அவருக்குச் சங்கீத ரசனையே இல்லாவிட்டால் நான் ரொம்ப வருத்தப்படுவேன். பாதியிலேயே நிறுத்திவிட்டால் அந்தக் கவலை இல்லையே!''

''அதையெல்லாம் இப்போதே நாம் கணிக்க முடியுமா? இப்போது நீ வீணை கற்றுக்கொள்வதுதான் முக்கியம்'' என்றார் அப்பா.

சொன்னதோடு நிற்கவில்லை. வீணை வாசிப்பில் நன்கு தேர்ச்சி பெற வைத்தார். அப்பாவின் ஆதரவு, இயல்பான திறமை நல்ல கோச்சிங் — எல்லாமாகச் சேர்ந்து

ரேடியோவில் அவ்வப்போது கச்சேரி செய்யுமளவுக்கு முன்னேறினாள். கல்யாணக் கச்சேரி, மேடைக் கச்சேரி கூடச் செய்யத் தொடங்கினாள்.

அதுபோன்ற ஒரு கல்யாணக் கச்சேரியின் போதுதான் அவள் நந்தகுமாரைச் சந்திக்க நேரிட்டது. சாதாரணமாகக் கல்யாணக் கச்சேரி என்றால் வசுமதி அசுவாரஸ்யமாகத்தான் போவாள். பொதுவாகக் கச்சேரி என்பது 'ரிசப்ஷன்' என்று கோடிட்ட இடத்தைப் பூர்த்தி செய்வதற்குத்தான் அமைந்திருக்கும் என்பது அவள் தீர்மானமான அபிப்பிராயம். வம்பளப்பிலும் வெட்டிப் பேச்சுக்குமிடையே கச்சேரியைக் கேட்க யாருக்கு நேரம் இருக்கிறது!

ஆனால், ஆச்சரியப்படத்தக்க விதத்தில் அன்று அதுபோன்ற சூழ்நிலை அங்கு இல்லை. உண்மையான ரசிகர்கள் குழுமியிருந்து அவள் வாசிப்பை ரசித்துக் கேட்டார்கள். கச்சேரி முடியும் தறுவாயில் ஒரு சீட்டு அவளுக்கு வந்தது. சீட்டைப் பிரித்துப் பார்த்ததும் அவள் முகம் சிவந்து போயிற்று. பிரபலமான சினிமாப் பாட்டை — ஓரளவு விரசம் தட்டும் பாடல் — வாசிக்கும்படி அதில் கேட்டிருந்தது.

அந்தச் சீட்டை யார் அனுப்பியிருக்கக் கூடும் என்பதை வசுமதியால் ஊகிக்க முடிந்தது. முன்னால் அமர்ந்திருந்த சுருட்டை முடியான வாலிபர்.

மைக்கின் முன், "ப்ளீஸ், மன்னியுங்கள். என் வீணைக்குக் கர்நாடக சங்கீதம்தான் தெரியும்!" என்று நறுக்கென்று சொல்லிவிட்டுத் தொடர்ந்து வாசித்தாள், பாடினாள். கூடவே வேறு ஏதாவது சீட்டு யாரிடமிருந்தாவது வருமோ என்று பயந்து சீக்கிரமே கச்சேரியை முடித்துவிட்டாள்.

வெளியே சற்றுச் சாவகாசமாக இருந்த போது அவளை நெருங்கி வந்தான் அந்த வாலிபன். "மிஸ், உங்களுக்குச் சினிமாப் பாட்டு என்றாலே பிடிக்காதா?" என்று கேட்டான்.

அவனை நிமிர்ந்து நோக்கினாள் வசுமதி. "பிடிக்காது என்று இல்லை. ஆனால் இன்று வாசிக்கும் மூட் இல்லை" என்றாள். அந்த வாலிபனின் உருவம் அவள் நெஞ்சில் ஆழப் பதிந்து போயிற்று.

அதற்குப் பின்னர் அவனைப் பல தடவை சந்தித்து விட்டாள். மியூசிக் சர்க்கிள், கந்தர்வ சபா, என்று எந்த இடத்துக்குப் போனாலும் முதல் வரிசையில் உட்கார்ந்து கச்சேரியை ரசித்துக் கேட்பான். கேட்டு விட்டுப் புத்திசாலித்தனமாக காமெண்ட்ஸ் அடிப்பான். ரேடியோக் கச்சேரியைக் கேட்டு விட்டுக் கடிதம் எழுதுவான்.

மெல்லத் தன் எண்ணத்தை அப்பாவிடம் தெரிவித்தாள் வசுமதி.

ஆட்சேபம் தெரிவிக்காமல் கல்யாணத்தை முடித்துவிட்டார்.

வசுமதி நந்தகுமார்!

அவளுக்கு உள்ளூற ஒரு பெருமிதம் பொங்கி எழுந்தது. தன் சங்கீதத்தை அனுபவிக்கும் ரசனை உள்ளம் கொண்டவரை மணம் செய்து கொண்டுவிட்டோம் என்ற விம்மிதம் பரவியது. மணமான பிறகும் தொடர்ந்து தன் ஈடுபாட்டைக் காண்பித்து வந்தான். சகட்டு மேனிக்கு விமர்சனம் செய்வான். பாடிக் காட்டுவான். ஒரு தரம் அவன் சாரங்காவில் பாடிக் காட்டியபோது, "அட! நல்ல குரல் இருக்கே உங்களுக்கு!" என்று உள்ளூற வியப்பும் பூரிப்பும் அடைந்து சொன்னாள் வசுமதி.

குரல்! நந்தகுமாரின் அந்தக் குரல்தான் அவர்கள் தாம்பத்தியத்தில் விரிசலை ஏற்படுத்தியது.

போன இரண்டாம் வருடம் நந்தகுமார் ஆபீஸில் ஆண்டுவிழா நடைபெற்றது. பிரபல இசை அமைப்பாளர் அசோக்கை முக்கிய விருந்தினராக அழைத்திருந்தார்கள். முன் வரிசையில் வசுமதி அமர்ந்திருந்தாள். அவளுக்கு வேடிக்கையாக இருந்தது அந்தச் சூழ்நிலை.

நிகழ்ச்சி தொடங்கியது. கணீரென்ற குரலில் நந்தகுமார் பாடினான். பாரதியார் பாட்டு. 'வீணையடி நீ எனக்கு—' (வசுமதி சிரித்துக் கொண்டாள். அப்புறம் பாபுலரான சில சினிமாப் பாட்டுக்கள்; கோரஸ்—

அரை மணி போல நிகழ்ச்சி நடந்திருக்கும். "பலே!" என்று தம்மை மறந்து கை தட்டினார் அசோக். இறுதியாக அவர் பேசும் போது, "நான் புதுப் புதுக் குரல்களை அறிமுகப்படுத்தி வருகிறேன் என்பது உங்களுக்குத் தெரிந்திருக்கலாம். இங்கு வந்த இடத்தில் தற்செயலாகச் சில நல்ல குரல்களைக் கேட்க நேர்ந்தது. நிச்சயமாக உபயோகித்துக் கொள்ள முயலுகிறேன்!" என்றார். பலத்த கரகோஷம் எழுந்தது.

ஏதோ விளம்பரத்துக்காகச் சொன்ன பேச்சுத்தான் என்று எல்லோருமே, வசுமதி—நந்தகுமார் உட்பட நினைத்தார்கள். ஆனால் பத்துப் பதினைந்து நாட்கள் கழித்து பெரிய கார் வந்து நின்றபோது, நந்தகுமார் திகைத்தான்.

"நந்தகுமார் யாருங்க?கூட்டியாரச் சொன்னாங்க."



## ஜோக் ராஜா

'கர்நாடக இசைக்கு முக்கியத்துவம் கொடுப்பீர்களா?' என்ற கேள்விக்கு இளையராஜா அளித்த பதில்: "கர்நாடக இசைக்கு முக்கியத்துவம் கொடுப்பதினால்தானே, நான் இசையமைக்கும் போது அதைத் தொடுவதேயில்லை. கர்நாடக இசைக்கு இதைவிடச் சிறந்த உதவி வேறென்ன செய்யமுடியும்?"

தகவல்: வ. தேனப்பன்

ஆதாரம்: திரைக்கதிர் செப்டம்பர் 79

''நான்தான். எதற்கு?''

''பாட்டுப் பாட! டெஸ்ட் பண்ண!''

நந்தகுமாருக்கு நிலை கொள்ளவில்லை. ''வசுமதி!'' என்று பரபரப்புடன் அழைத்தான். அவசர அவசரமாகப் பனியனை மாற்றிப் போட்டுக் கொண்டு சட்டையை அணிந்து கொண்டான்.

''கங்கிராட்ஸ்!'' என்று காதோடு மெல்லச் சொன்னாள் வசுமதி.

நநதகுமார் முதலில் பாடிய பாட்டே ஒரு டூயட்தான். பிரபல பாடகி மிருதுளாவுடன் கூடப் பாடியது, 'வானத்தில் பவனி வரும் வட்ட நிலாவே—'

நந்தகுமார் எந்த வேளையில் சினிமாவுக்காகப் பாடினானோ, அது திடீரென்று 'ஹிட்'டாகிவிட்டது. மெட்டுத்தான் காரணம் என்றார்கள் சிலர். இல்லை, பாட்டைப் படமாக்கின விதம்தான் என்றார்கள். ''குரல்தான் சார்! நைஸ் வாய்ஸ்!'' என்று அடித்துச் சொன்னார்கள் வேறு சிலர்.

முதல் பாட்டைத் தொடர்ந்து அடுத்தடுத்து வாய்ப்புக்கள் கிட்டி வந்தன.

வசுமதிக்குத் தன் கணவன் பின்னணிப் பாடகன் ஆகிக்கொண்டு வருகிறான் என்பதில் சந்தோஷம். ''என்ன பெரிய ஆளாகிக் கொண்டு வருகிறீர்களே!'' என்றாள்.

''நான் ஒரு சாதாரணப் பின்னணிப் பாடகன்தானே?''

''இப்பொழுது முன்னணியில்'' என்று சிரித்தாள் வசுமதி.

வசுமதிக்கு அதில் உற்சாகம்தான். தன் கணவன் குரல் எங்கு கேட்டாலும் ஓடிச் சென்று கேட்பாள். ரேடியோவில் ஒலித்தால் மிக அருகில் சென்று கேட்பாள். அவளுக்குப் பிடித்தமான சில பாட்டுக்களை டேப்பில் பதிவு செய்தாள்.

ஆனால் போகப் போகத் திடீரென்று ஓர் ஏக்கம் அவளைச் சூழ்ந்து கொண்டது. காரணம் ஏனென்று அவளுக்கே தெரியவில்லை.

**சங்கீத சினிமா!**

தாளமும் ராகமும் தலைப்பாக அமைந்த சில படங்கள் இதோ!

**1. அபூர்வ ராகம் 2. மேளதாளங்கள் 3. தப்புத் தாளங்கள் 4. பைரவி 5. ஆனந்த பைரவி 6. தில்லானா மோகனாம்பாள் 7. பாட்டும் பரதமும் 8. மங்கள வாத்தியம்** —ஆர். பி. சாரதி



ரிகார்டிங் முடிந்து இரவு நேரம் கழித்துத் திரும்பும்போதெல்லாம் முன்பு ஆவலுடன் விசாரிப்பாள். என்ன பாட்டு, ட்யூன் எப்படி? இன்ஸ்ட்ருமெண்ட்ஸ் என்னென்ன? என்றெல்லாம் விசாரிப்பாள். இப்போது அந்த சுவாரஸ்யம் குறைந்து போய்விட்டது.

''இன்றைக்குச் சிரமப்பட்டு விட்டேன், வசு. ரொம்ப 'லோ பேஸில்' பாடவேண்டியிருந்தது'' என்று நந்தகுமார் சொல்லும்போது, எவ்விதப் பிரதிபலிப்பும் வசுமதியிடம் ஏற்படவில்லை. வெறுமனே 'ஊம்' கொட்டினாள். தனக்கும் நந்தகுமாருக்கும் இடையே ஒரு பிரிவு ஏற்பட்டு விட்டது போல் தோன்றியது. தான் அவனை விட்டு, விலகி வெகு தூரம் செல்வது போல் உணர்ந்தாள்.

அவள் மனசுக்குத் தூபம் போட்டது போல் சியாமளி வீட்டில் நிகழ்ந்தது.

சியாமளி வீட்டில் கிருகப் பிரவேசம். சாப்பாடு எல்லாம் முடிந்து அரட்டை அடித்துக் கொண்டிருந்தார்கள். மேசை மீது சினிமாப் பத்திரிகை இருந்தது. அதை எடுக்கப் போனபோது ஒருத்தி ஜாடையாக சியாமளி காதில் ஏதோ சொல்லிச் சிரித்தாள்.

'ஏன், என்னது?—'

புரட்டிக் கொண்டே போனவளின் பார்வை சட்டென்று நிலைக்குத்தி நின்றது:

''வானத்தில் பவனி வந்த அந்தப் புதுப் பாடகருக்கும் மிருதுவான குரலை உடைய பாடகிக்கும்...''

பொத்தென்று பத்திரிகையைக் கீழே போட்டாள். கண்கள் இருண்டன, 'ரிகார்டிங் ரிகார்டிங்' என்று சொல்லிவிட்டுக் கண்ட நேரங்களில் திரும்புவதற்கான காரணம் இதுதானா? கண்களில் நீர் முட்டியது.

''வசு! என்ன இது! இது வெறும் குப்பைப் பத்திரிகை!'' என்று சியாமளி தேற்றினாள்.

வசுமதி புன்னகை செய்ய முயன்று தோற்றுப்போனாள்.

பேச்சு வேறு திசையில் திரும்பியது. வசுமதிக்கு மனசு சமாதானமாகவில்லை. குறுகுறுவென்று வீட்டுக்குப் போனாள். நந்தகுமார் வரவில்லை. அன்றும் தாமதமாகத்தான் வந்தான். வந்ததுமே வசுமதி வெடித்தாள். ''ரிகார்டிங் ஸ்டுடியோவிலா இல்லை வேறு எங்காவதா?''

நந்தகுமார் ஒரு நிமிடம் திகைத்தான். வசுமதியின் முகத்தில் தெரிந்த கோபாக்னி சினிமாப் பத்திரிகை — அவனுக்குப் புரிந்து விட்டது.

''உன் கண்ணில் பட்டுவிட்டதா அந்த 'காஸிப்!' அந்த நிருபர் மிருதுளாவிடம் போய் அவள் கல்யாணத்தைப் பற்றி ஏதோ கேட்டிருக்கிறான். சூடாகப் பதிலைக் கொடுத்திருக்கிறாள். அவனுக்குக் கோபம் வந்து இது மாதிரி....''

''காரணம் சொல்வதா உங்களுக்குக் கஷ்டம்?'' என்றாள் வசுமதி கிண்டலாக.

அவளைக் கோபத்துடன் முறைத்துப் பார்த்துவிட்டு நந்தகுமார் வெளியேறினான்.

வசுமதி முகத்தை மூடிக் கொண்டு விசும்பி விசும்பி அழுதாள். 'கடவுளே! ரசிக்கத் தெரியாத, சங்கீதம் என்றால் என்ன என்பதே தெரியாத ஒருத்தர் தனக்குக் கணவராக வாய்த்திருக்கக் கூடாதோ? இது போன்ற பிரச்னையே எழுந்திருக்காதே!'

மறுநாள் மறுபடியும் குழந்தை மாதிரி முரண்டினாள். ''இனிமேல் நீங்கள் சினிமாவில் பாடக் கூடாது.''

''ஸில்லியாக உளறாதே!''

வசுமதியால் தாள முடியவில்லை. நந்தகுமார் குரலைக் கேட்கும்போதெல்லாம், அவனும் மிருதுளாவும் சல்லாபிப்பதுபோன்ற காட்சி மனத் திரையில் விரிந்து அவள் கோபத்தை அதிகப்படுத்தியது. டேப்பில் இருந்த அவன் குரலை அழித்தாள். வெளியே பாட்டுக் கேட்டால் காதைப் பொத்திக்கொள்வாள். ரேடியோவில் கூட அவன் பாட்டைக் கேட்பதில்லை.




வடநாட்டைச் சேர்ந்த ஜுகா பாய் என்ற ஒரு 60 வயதுப் பெண்மணி ஒரு பெட்டிக்கடை வைத்து வாழ்க்கையை ஓட்டி வருபவர். இவர் சமீபத்தில் இவரது ஊரில் வெளியான ஒரு படத்தைத் தொடர்ந்து 183 நாட்கள் பார்த்தாராம்! அதனால் 183வது நாளன்று (அதாவது படத்தின் கடைசி நாள்) தியேட்டர்காரர் இவருக்குப் புடவை, ரவிக்கை பரிசளித்தார்!

இந்தப் படத்தில் வரும் ஒரு 'கவ்வாலி' பாட்டுக்காகவே இவர் 183 நாட்கள் தொடர்ந்து இப்படத்தைப் பார்த்தாராம்!

சம்பத்குமாரி, ஆதாரம்: 'காரவான்'

அன்று வீட்டுக்கு வரும்போதே நந்தகுமார் உற்சாகமாக இருந்தான். 'லல்லா லலா' என்று சீட்டி அடித்துக் கொண்டே வந்தான். ''மிருதுளாவுக்குக் கல்யாணம் நிச்சயமாகியிருக்கு!'' என்றான்.

''ஓகோ!'' என்கிற மாதிரி வசுமதி நிமிர்ந்து பார்த்தாள். நியாயமாக இந்தச் செய்தி அவளுக்கு மகிழ்ச்சியை அளித்திருக்க வேண்டும். ஆனால் வசுமதிக்கு அப்படித் தோன்றவில்லை. ஏன்?

''அதைப் பற்றித்தான் மிருதுளாவிடம் பேசிக் கொண்டிருந்தேன். லேட்டாகிவிட்டது...''

''ரிசப்ஷனுக்கு உங்கள் மியூஸிக்தானே!'' லேசான கிண்டல் வசுமதியின் குரலில் இழையோடியது.

''இல்லை. உன் வீணைக் கச்சேரிதான்! நீதான் ஒத்துக்கொள்ளணும்.''

வசுமதி உடன் பதில் சொல்லவில்லை. எழுந்தாள். இன்னும் நாளிருக்கிறது என்று தோன்றியது.

''அப்புறம் இன்னொரு விஷயம்.'' — நந்தகுமார் ஆரம்பிக்கும்போதே வாசற் கதவு தட்டப்படும் ஓசை கேட்டது. வயதானவர் ஒருத்தர் நுழைந்தார்.

''வாருங்கள்! வாருங்கள்!'' என்று அவரை உற்சாகமாக வரவேற்றான் நந்தகுமார்.

இவரை எங்கேயோ பார்த்திருக்கிறோமே என்று எண்ணினாள் வசுமதி. பரபரவென்று உள்ளே போய்க் காபி போட்டுக் கொண்டு வந்தாள்.

ஆ... ஞாபகம் வந்துவிட்டது. லலித கலா அகாடமியின் செக்ரடரி!

''நானே சொல்லணுமென்றிருந்தேன். நீங்களே வந்துவிட்டீர்கள்!'' என்றான் நந்தகுமார்.

அவர் வசுமதியை நோக்கி, ''இந்த வருஷம் சீஸன் கச்சேரியில் மூன்றரை மணி புரோகிராமுக்கு உங்கள் பெயரைப் போட்டிருக்கிறோம்!'' என்றார்.

வசுமதிக்கு ஆச்சரியத்தால் பேச்சு வரவில்லை. தனக்கா! இந்த அகாடமியில் அதுவும் சீஸனில் கச்சேரி செய்வதென்றால் எவ்வளவு பெரிய பேறு!

''வீணையை வீணையா 'கிம்மிக்ஸ்' இல்லாமல் இனிமையா வாசிப்பவர் என்று உங்களைப் பற்றிப் பிரசிடெண்ட் அடிக்கடி சொல்வாரு, ஸோ, வரட்டுமா?''

அவர் சென்ற திசையையே பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருந்தாள். பிரமிப்பும் பூரிப்பும் ஒருங்கே எழுந்தன. நந்தகுமார் அவள் பக்கத்தில் அமர்ந்தான். ''உன்னைக் கவனித்துக் கொண்டே இருக்கிறேன், விசு. கொஞ்ச மாசமாகவே உனக்குச் கச்சேரி இல்லே. அது உன்னை ரொம்பவும் 'அஃப்பெக்ட்' பண்ணி விட்டது. நான்தான் இவரைப் பார்த்துச் சொல்லி, உனக்கு ஒரு சான்ஸ்—'' என்று நந்தகுமார் ஆதரவாகச் சொல்லிக் கொண்டே போனான்.

திடீரென்று வசுமதியின் உள்ளத்தில் மின்னல் அடித்த மாதிரி பிரகாசம் ஏற்பட்டது. நந்தகுமார் சொல்வது எத்தனை உண்மை! அந்த ஏக்கம்தான் — கச்சேரி இல்லையே, என்ற விரக்திதான் மனக் குமுறலாகவும் பொறாமையாகவும் வெடித்திருக்கிறது.. அந்த வக்கிரமான மனசுதான் கண்டவர்களை நம்பிக் கணவனைச் சீண்ட வைத்திருக்கிறது....

''ரொம்ப தாங்க்ஸ்...'' என்றாள் மெதுவாக, ஆத்மார்த்தமாக. பிறகு பூஜை அறைக்குச் சென்று வீணையின் மீது படிந்திருந்த தூசியைத் தட்டினாள், தலைச்சனை ஆவலுடன் தூக்கி வைத்துக் கொள்ளும் இளந்தாய் மாதிரி, வீணையை மடி மீது வைத்துக் கொண்டாள், மனசுக்குப் பிடித்தமான வர்ணத்தை வாசித்தாள்.

இணைந்த அவர்கள் தாம்பத்தியத்துக்கு ஓர் அத்தாட்சி போல வீடு முழுதும் இனிமையாக அந்த இசை எதிரொலித்தது.

# முற்றுப் பெறாத வாக்கியங்கள்..



மதனு மிருத்தியுஞ்சயன்

## அத்தியாயம் 3

“ஹலோ....''

''மிஸ்டர் மதன்லால்?''

''யெஸ்...''

''எ கால் ஃபார் யூ...'' ஆபரேட்டர் பேசினன்.

''ஹலோ... மதன்லால் ஸ்பீக்கிங்'' — விஞேத் பேசினன்.

''சார் நான்தான் அருண் பேசறேன்...''

''என்ன அருண்... சொன்ன வேலையைச் செஞ்சயா?''

''செஞ்சுட்டேன்.''

''எங்கேந்து பேசறே?''

''கன்டோன்மென்ட் ஸ்டேஷன் கிட்டே ஒரு பப்ளிக் பூத்லேயிருந்து...''

''ஐ வான்ட் டு டாக் டு யூ இன் பெர்சன் இம்மீடியட்லி...''

''வரட்டுமா சார்..?'' அருண் கேட்டான்.

''நீ வரவேண்டாம். நான் வரேன்.... எங்கே வர?''

''கன்டோன்மென்ட் ரயில்வே ஸ்டேஷன் டிக்கட் கௌண்டர் பக்கத்திலே இருக்கேன் சார்.''

''தெளத டைம் ஐஸ் ட்வெல்வ் தர்ட்டி. அரை மணிலே வந்து சந்திக்கிறேன்.'' விஞேத் போனை வைத்தான்.

சற்றுச் சோர்ந்திருந்தவனுக்கு அருண் செய்த போன் கால் மலர்ச்சியைத் தோற்றுவித்தது.

சென்னையிலிருந்து உதவிக்காக விஞேத்துடன் வந்தவன் அருண். சங்கம் தியேட்டர் வாசலில் காத்திருந்து நீல கமலே ஃபாலோ செய்து அவளுடைய இருப்பிடத்தைக் கண்டறிய அவனை விஞேத் ஏவியிருந்தான்.

ஒரு ஆட்டோ பிடித்து கன்டோன்மென்ட் ரயில்வே ஸ்டேஷனுக்கு விஞேத் போனபோது நள்ளிரவு மணி ஒன்று ஐந்து.

அருண் காத்திருந்தான்.

ஆட்டோவை அனுப்பிவிட்டு இருவரும் நடக்கலாயினர்.

''அவளை ஃபாலோ பண்ணினையா? நான் தியேட்டர்லேந்து கிளம்பினதிலிருந்து நடந்ததை டிடெய்லாச் சொல்லு!'' விஞேத் கேட்டான்.

''நீங்க கார்ல போன உடனேயே அவளும் வெளியே வந்துட்டா. ஒரு முரடன் அவளோட வந்து சேர்ந்துண்டான். ரெண்டு பேரும் ஏதோ பேசிண்டாங்க. அவன் உடனே வேகமா வெளியே வந்து ஒரு கார்ல போயிட்டான். இவ கொஞ்ச நேரம் தியேட்டர் வாசல்லே மயங்கி நின்னுண்டிருந்தா. ஆள் தேடுருளோ என்று தோணித்து. ஃபிராங்காச் சொல்றேன் சார்... பார்வைனுவிடி பிரமாதம். எனக்கே கூட ஒரு மாதிரியா இருந்தது....''

''தேவய்... நீ என்னு... பீ கார்ஃபுல்... விழுந்துடப் போறே....''

''நோ....நோ.... ஒரு வார்த்தைக்குச் சொன்னேன்....

''ம்....ம்.... மேலே சொல்லு...''

''ஒரு ஆட்டோ பிடிச்சுக் கிளம்பினள். நானும் இன்னொரு ஆட்டோல ஃபாலோ

பண்ணினேன். சிவாஜிநகர்லே வீடு. இவ ரூம் மாடிலே. ஒரு வய்சான வேடி வீட்டிலே தென்பட்டா... என்னு தமாஷ்னு வெளிலே சாவி போட்டுக் கதவைத் திறந்து இவ உள்ளே போனு... கிழவியை உள்ளே விட்டுப் பூட்டிட்டு வந்திருக்கா.... பத்து நிமிஷம் மாடிலே லைட் எரிஞ்சது.... தூங்கிட்டா...''

''நீ அவளை ஃபாலோ பண்ணினதை யாராவது கவனிச்சிருப்பாங்களா?''

''நோ சான்ஸ்... நான் போன ஆட்டோக்காரன் கிட்டக்கூட ஏதோ பொய் சொல்லிச் சமாளிச்சேன். (வேறு) ஏதாவது நியூஸ் உண்டா சார்?''

''நெறைய இருக்கு... வா ஒரு சாயா அடிச்சுண்டே பேசலாம்...''

இருவரும் ஒரு டீக்கடைக்குள் நுழைந்து ஓரமாக உட்கார்ந்து கொண்டனர்.

அருண் விநோத்தின் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தான்.

விநோத் தொடர்ந்தான்.

''என்னை அடையாளம் கண்டு பிடிச்சுட்டாங்க. நீ தியேட்டர் வாசல்லே பார்த்தாயே அவன் கார்ல என்னைத் துரத்தினான். அவனைச் சமாளிச்சு ஹோட்டல் போனேன். நான் எதிர்பார்த்தபடி ஒரு முரடன் என் ரூம்ல இருந்தான். ஆனு தப்பிச்சுட்டான். வெளில வந்தா எனக்கு எச்சரிக்கைக் கடிதம் வேறே. இருபத்து நாலு மணி நேரத்துக்குள்ளே நான் மெட்ராஸ் திரும்பிடணுமாம்....''

''இல்லேன்னு?'' அருண் இடைமறித்தான்.

'' 'பொறுத்திருந்து பார்' என்று எச்சரித்து இருக்காங்க...''

''இப்போ என்னசார் செய்யப்போறீங்க?''

''உடனே அந்தப் பொம்பளையை வீட்லே மீட் பண்ணி ஆகணும்....''

''நானும் வரட்டுமா?....''

''வேண்டாம்பா... நீ மயங்கிப் போயிடுவே. காரியம் கெட்டுடும்...''

''அதெல்லாம் சவலைப்படாதீங்க...''

''சீசீ.... வார்த்தைக்குச் சொன்னேன்: நான் தனியாப் போறுத்தான் சில உண்மைகளை வரவழைக்கலாம்.''

''நான் ஹோட்டலுக்குப் போகவா?''

''வேண்டாம். ஒரு ஆட்டோ பிடிச்சு கெம்பகௌடா சர்க்கிள் போ... பீர் சாப்பிடு. ஒரு பாட்டிலுக்கு மேலே சாப்பிடாதே. குஷாலா சிகரெட் பிடிச்சுண்டு பெங்களூர் ரயில்வே ஸ்டேஷனுக்குப் போ. ஒரு ரவுண்ட் அடி. மறுபடியும் கெம்பகௌடா சர்க்கிளுக்கு நடந்து போ. ஆட்டோ பிடிச்சு சிவாஜிநகர் வா. ஒரு டீ சாப்பிடு: மெதுவா நடந்து அவ வீட்டுக்குப் பக்கத்திலே வந்து காத்திண்டு இரு. எப்படியும் ரெண்டு மணி நேரம் ஆயிடும். அதுக்குள்ளே நான் வந்துடுவேன். ரெண்டு பேருமா போகலாம்.''

''நாளைக்கு என்ன சார் புரோக்ராம்?''

''இனிமே நான் ஹோட்டலுக்கு இதே மாதிரி போய்த் தங்கப் போறதில்லே. என் சூட்கேஸை 109ம் நம்பர் ரூம்லே கொண்டு வந்து வைச்சுட்டேன். அந்த அறையும் 111ம் நம்பர் அறையும் இருக்கட்டும். என் அறையையும் காலி செய்ய வேண்டாம். நீ 109லேயே தங்கிண்டு என்னைத் தேடிண்டு எவனாவது வரானான்னு கண் வெச்சுக்கோ.''

''நீங்க எங்கே தங்கப் போறீங்க?''

''நாளைக்கு ஒரு நாள் மல்லேஸ்வரத்திலே ஆறும் கிராஸ் 55ம் நம்பர்லே என்னோட






ஒருத்தி : ''என்ன இது...? அவள் சண்டை போட்டு, அடிக்கும்போது மட்டும், ''டிஷ் ஷியும்'' ன்னு, தனியா சத்தம் கேட்குது...?''

மற்றவள் : ''அவள் கணவன் வீட்டுக்குள்ளே யிருந்து, 'சவுண்டு'' கொடுப்பார்! சினிமா ஒலியமைப்பாளராச்சே? அவர்...!''

— திருமுருகன்

---

அங்கிள் வீட்டுல இருக்கப் போறேன். நாளை மறுநாள் பற்றி நாளைக்கு முடிவு பண்ணிக்கலாம்.''

இதற்குள் இருவரும் நீல்கமல் வீட்டு அருகில் வந்து விட்டிருந்தனர்.

அருண் வீட்டை அடையாளம் காட்டினான்.

''உங்களுக்கு அவ வீட்டிலே ஏதேனும் அபாயம் வந்தா என்ன செய்வீங்க?'' அருண் பயத்துடன் கேட்டான். தன்னையும் கூட வரச் சொல்லி வினோத் கூப்பிட மாட்டானா என்கிற நப்பாசை வேறு.

''நைன்டி நைன் பெர்சன்ட் டிரபிள் வராது. அப்படியே வரும்போல 'ஸ்மெல்' வந்தா நான் தப்பிச்சுப்பேன்.... ஓகே....''

''ஓகே....'' பிரிந்தனர்.

தியேட்டரை விட்டு மதன் லால் இடையே கிளம்பியது நீல் கமலுக்குப் பெருத்த அதிர்ச்சியைத் தந்தது.

அதற்கு இரண்டு காரணங்கள்.

ஒன்று முன்பே சொன்னபடி 'பாஸ்' தண்டிப்பாரோ என்கிற அச்சம். இரண்டாவது, மதன் லாலைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு இந்தக் கும்பலிலிருந்து தப்ப முயற்சி செய்யலாம் என்று மனப்பால் குடித்துக் கொண்டிருந்தாள். அதற்கு இடையூறு.

ஜோஸ் போனதும் தியேட்டர் வாசலில் இருந்த ஆட்டோ ஒன்றைப் பிடித்து வீடு திரும்பினாள்.

படுத்து வெகு நேரம் ஆகியும் நீல் கமலுக்குத் தூக்கம் பிடிக்கவில்லை. இரவுக் காட்சி சினிமா முடிந்து போகும் ஜனங்களின் பேச்சுக் குரலும் ஓய்ந்தாகிவிட்டது. தூக்கம் வரவில்லை.

புரண்டு புரண்டு படுத்தாள்.

சொல்லவொண்ணாத் துக்கம் தொண்டையை அடைத்தது.

''ட்ரிங்....ட்ரிங்....''

காலிங் பெல் அடிப்பதைக் கேட்டதும் யாராக இருக்கும் என்று அவளுள் யோசனை.

ஜோஸாகத்தான் இருக்கும் என்று முடிவு செய்தாள். அவன்தான் அன்று காலையிலிருந்து அவளை 'ஒரு மாதிரி'யாகப் பார்த்துக்கொண்டிருக்கிறான்.

அவனை எப்படிச் சமாளிப்பது?

'பாஸ்' பெயரை உபயோகித்துப் பயமுறுத்தலாம்.

அதையும் மீறி அவன் தகராறு செய்தால்—

ஒரு கை பார்த்துவிடுவது என்று முடிவுக்கு வந்து கதவைத் திறந்தவளுக்கு மதன் லாலைக் கண்டதும் திகைப்பு... மகிழ்ச்சி.

''வாங்க... வாங்க...'' வரவேற்றாள்.

உள்ளே நுழைந்ததும் வினோத் கதவை உட்புறமாகத் தாளிட்டான்.

வீட்டைக் கண்ணோட்டமிட்டான்.

''யாரும் கிடையாதுங்க... சமையல்காரி மட்டும்தான். அவளும் ஊமை. காதும் கேட்காது. தூங்கிண்டு இருக்கா. வாங்க, நாம என் பெட் ரூமுக்குப் போகலாம்...'' அவனுடைய கையைப் பிடித்து மாடிக்கு அழைத்துச் சென்றாள்.

கலைந்த கேசம்... ஊறிய முகத்தில் சற்றுத் தூக்கலான நாசி. நழுவிய புடவை. கண் கவர் எழில்கள். — படுக்கையிலிருந்து எழுந்து வந்த நிலையில் அவள் தன் கையால் பிடித்து உரசியபடி அவனை மாடிக்கு அழைத்துச் சென்றபோது திமிறும் உணர்ச்சி களை அவன் கஷ்டப்பட்டு அடக்கிக் கொண்டான்.

தன் நிலையில் அருண் இருந்திருந்தால் என்ன நடந்திருக்கும் என்று ஒரு நினைவு ஓடியதும் சிரித்துக் கொண்டான்.

''என்ன சிரிக்கிறீங்க...'' என்று கேட்டபடி அவன் தோளில் தன் உடம்பைச் சாய்த்துக்கொண்டாள்.

''ஒன்றுமில்லை'' என்றபடி தன்னை விடுவித்துக் கொண்டான்.

பெட்ரூம் சென்று உட்புறம் தாளிட்டு அவனைத் தன் பெட்டில் அமரச் செய்து தானும் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டாள்.

வினோத்துக்கு உள்ளூற வியர்த்தது. இது மாதிரி ஒரு பெண்ணிடம் அவன் தனியாகப் படுக்கையில் மாட்டிக் கொள்வது இதுதான் முதல் தடவை.

மனக் கண்ணில் சுநீதா ஓடினாள்.

இந்தக் காட்சியைச் சுநீதா பார்த்தால் எப்படி ரியாக்ட் செய்வாள் என்று யோசித்தான்.

''என்ன பேசாம இருக்கீங்க ... திடீர்னு தியேட்டர்லே விட்டுட்டுப் போயிட்டீங்களே!'' அவள் ஊடினாள்.

'ஜோஸ் துரத்திக் கொண்டு போனானே ஒருவேளை மோதியிருப்பாரோ?' — நீல்கமல் உள்ளத்தில் ஒரு கேள்வி.

'ஜோஸ் மோதியிருந்தால் தன் வீடு தேடி இந்த ஆள் வந்திருக்க மாட்டார்' என்று உடனே சமாதானம்.



# தாக்கர்ஸி—தலைமுறையினரின் நாகரீக இணைப்புப் பாலம்

எல்லா இடங்களிலும் எழிலோங்கும் குடும்பங்களின் முதலாவது தேர்வு தாக்கர்ஸி துணிகள், வாயில், லிரேு, கேம்ப்ரிக், பாப்ளின், 2 × 2, வேட்டி, ஜக்கார்டு, ஃபர்னிஷிங், க்ரோரேு-லேஸ்ட் (முன்கூட்டியே சுருக்கப்பட்டது) மற்றும் டெபிலேஸ்ட் (மடிப்பைத் தடுக்கப்பரிசோதனை செய்யப்பட்டது) காட்டன் ஆகியவற்றில் எல்லையற்ற பிரிண்டுகள், நெசவுகள் மற்றும் வண்ணங்கள். தவிர பாலியெஸ்டர் கலப்பிழை சூட்டிங்குகள், ஷர்ட்டிங்குகள், ஆடைத் துணிகள் மற்றும் புடவைகள்.

**ஹிந்துஸ்தான்** ஸ்பின்னிங் அண்ட் வீவிங் மில்ஸ் லிட்.

1873 முதல் TF உன்னதமான ஜவுளிப் பரம்பரைச் சின்னம்

Dattaram-HM-16 TAMIL

'தன்னுடைய அட்ரஸ் எப்படித் தெரிந்தது?' என்று வேறு ஒரு கேள்வி.

இதற்குள் தன்னைச் சுதாரித்துக் கொண்டவனாக விஜேத் பேச ஆரம்பித்தான்.

''ஹோட்டல்லே நீ என்ன பேர் சொன்னேன்னு ஞாபகம் இல்லே. உன் உண்மையான பேர் என்ன?''

''நீல் கமல்.''

''அப்பா, அம்மா வெச்ச பேரா?''

''அவங்களையே தெரியாதபோது அவங்க வெச்ச பேரான்னு எனக்கு எப்படித் தெரியும்? நெனவு தெரிஞ்ச நாள்லேந்து இதாங்க பேர்.''

''ஒன் பொழுப்பே விபசாரத்துலேதானா?'' நயமற்ற கேள்வி. நீல்கமல் ஓவென்று அழுதாள்.

விஜேத் அவளுடைய தோளை மெதுவாகத் தொட்டான்.

''அழாதே.... கண்ணைத் துடைத்துக் கொள்.... எங்கிட்டே இப்போ நீ சில உண்மைகளைச் சொல்லணும்... நான் உண்மையிலே ஒரு வைர வியாபாரி இல்லே.... சி. ஐ. டி. நெனைச்சா உன்னை இப்பவே என்னாலே கைது செய்ய முடியும்!''

''செஞ்சுடுங்க.... உங்களைக் கையெடுத்துக் கும்பிடறேன்... கைது செஞ்சிடுங்க.''

''தோ பார் நீல் கமல்... நீ மாத்திரம் நான் சொல்றபடி நடந்துண்டா என்னாலே உன்னைக் காப்பாத்த முடியும். ஒரு நல்ல எதிர்காலத்தை ஏற்படுத்திக் கொடுத்து மற்ற பெண்களைப் போல நீ வாழ்க்கை நடத்த வழி செய்து கொடுக்க என்னாலே முடியும்!''

''நீங்க எப்படிச் சொன்னாலும் அதுபடி நடக்க நான் தயாருங்க. என்னை இந்தக் கும்பல்லேந்து காப்பாத்திடுங்க... எல்லோரையும் போலக் கல்யாணம் செய்துகொண்டு குடும்பமும், குழந்தையுமாத்தான் வாழணும்னு எனக்கு ஆசை. என்னை எவன் ஏத்துப்பான்? உங்களைப் பார்த்தது முதல் என் மனசுலே ஒரு சபலம்... என்னை உங்க அடிமையா ஏத்துக்குங்க... கல்யாணம் செஞ்சுக்க வேணும்.... உங்களுக்குன்னு மட்டும் வாழற மாதிரி வாழ்க்கை ஏற்படுத்திக் கொடுங்க... உங்க சொத்தா நெனைச்சு எப்ப வேணு நீங்க வரலாம் எப்ப வேணு நீங்க போகலாம்... உங்களைத் தவிர என்னை வேறு எவனும் தொடக் கூடாது... அது மாதிரி வாழ்க்கை அமைச்சுத் தாங்க... நான் என்ன வேணு செய்யறேன்...'' விஜேத்தின் மார்பில் முகத்தைப் புதைத்தபடி நீல் கமல் அழுதாள்.

அவளுடைய மார்பு அவனுடைய நெஞ்சோடு அழுந்தியபோது, அவன் சற்றே தன்னை மறந்தான்.

அவளுடைய தோளில் இருந்த அவனது கைகளின் பிடி அழுத்தமாகியது.

அவனது நிலையைப் புரிந்து கொண்டு தனது கைகளால் அவனை மேலும் தழுவியபடி படுக்கையில் அவனை மல்லாந்த நிலையில் சாய்த்தாள். அவன்மேல் படர்வது காஷ்மீரப் பட்டா?

திடீரென்று கட்டிலின் மேல் ஓர் உருண்டையான பொருள் ஜன்னல் வழியாக வந்து விழுந்தது.

காகிதம் சுத்தப்பட்ட கல்.

விஜேத் காகிதத்தைப் பிரித்தான்.

'ஒரு முரடன் வீட்டை நோக்கி வருகிறான் ஜாக்கிரதை—அருண்.'

''என்னங்க அது...'' நீல்கமல் கேட்டாள்.

''யாரோ வராங்களாம்...''

''ட்ரிங்... ட்ரிங்....'' காலிங் பெல் அடித்தது.

விஜேத் மெதுவாக ஜன்னல் வழியாக எட்டிப் பார்த்தான்.

'செவன் ஹெவன்' ஹோட்டல் அறையில் தன்னுடன் சண்டையிட்ட முரடன் நிற்பது தெரிந்தது.

முகத்தை இழுத்துக் கொண்டான்.

நீல்கமல் எட்டிப் பார்த்தாள்.

டேவிட்...

அதிர்ச்சியால் அவளுடைய உடல் நடுங்கியது.

இந்த இக்கட்டிலிருந்து எப்படித் தப்புவது என்று அவளுக்குப் புரியவில்லை!

(தொடரும்)

---

நிலவில்லாத நீல வானம் உண்டு. நிலவில்லாத திரைவானமில்லை. பாடல் பெற்ற திரை நிலா சில :

கண்ணகி—சந்திரோதயம் இதிலே...!
சொர்க்கவாசல்—நிலவே, நிலவே ஆடவா...!
மிஸ்ஸியம்மா—வாராயோ வெண்ணிலாவே...
கோமதியின் காதலன்—வானமீதில் நீந்தி ஓடும் வெண்ணிலாவே...
சண்டிராணி—நிலா நிலா ஓடிவா...
தங்கமலை ரகசியம்—அமுதைப் பொழியும் நிலவே...
பட்டினத்தார்—நிலவே நீ ஒரு சேதி சொல்லாயோ?
பாக்கியலக்ஷ்மி—காணவந்த காட்சி என்ன வெள்ளி நிலவே...
வீரபாண்டிய கட்டபொம்மன்—இன்பம் பொங்கும் வெண்ணிலா...

—ஆர். பி. சாரதி



# நாளைக்கு நிம்மதி வந்து விடும்

பார்வதவர்த்தனி

மூக்குக் கண்ணாடிக் கூட்டிலிருந்து கண்ணாடியை எடுத்துப் புடவைத் தலைப் பால் அதைத் துடைத்து விட்டுக் கொண்ட பிறகு முகத்தில் பொருத்திக் கொண்டாள் ஜானகி.

தள்ளாமை வந்து விட்டது. நடக்கிற நடையில், வகுப்பில் பாடம் நடத்துகிற பொழுது மூச்சு இரைக்கிற இரைப்பில் நன் றாகத் தெரிந்தது. சீக்கிரமே ஓய்வைத் தேடிக் கொள்ளலாம் போலிருந்தது.

சின்ன வயசில் கட்டிப் பார்த்த லட்சியக் கோட்டைகள் எதுவும் இப்போது இல்லை. வெறும் மண் மேடுகளாக அவை எப் போதோ மாறிவிட்டன. வாழவேண்டிய வயதில் கணவன் போய், காப்பாற்ற வேண் டிய வயசில் பிள்ளை தன் மனைவியுடன் தனிக் குடி போய்—

நல்ல வேளை. வயிற்றைக் கழுவிக் கொள்ள ஆதி நாளில் கிடைத்த இந்த ஆசிரியர் வேலையாவது உதவுகிறதே!

அவள் எப்போதோ முடிவு செய்து விட்டாள். தன் வாழ்க்கை வெறும் பாலை நிலம் என்று. அதைப் பாலை நிலம் என்று முடிவு செய்த பின்னர், வெறும் கானல் நீரைக் காண எப்போதுமே ஆசைப்பட்ட தில்லை.

விளையாட்டைப் போல் நான்கு வருஷங்கள் ஓடிப்போய்விட்டன, பிள்ளையும் மருமகளும் தனியே போய். விடுமுறை நாட்களில் எப் போதாவது போய்ப்பார்த்துவிட்டு வருவாள்.

போய் நாற்பத்திரண்டு பையன்களோடு கத்தித் தொலைக்க வேண்டும். சாலையைக் கடக்க நடையை எட்டிப் போட்டாள்.

''இதோ நானும் வந்துட்டேன் டீச்சர், கொஞ்சம் இருங்க...''

குரல் கேட்டது. சற்று நின்றாள் ஜானகி. மாலா டீச்சர்!

''வாங்க மாலா!'' என்றாள்.

ஜானகியுடன் சேர்ந்து கொண்டவள், ''உங்களுக்கு விஷயம் தெரியுமா?'' ''உங்கள் மருமகள் முழுகாமல் இருக்கிறாளாமே? நேத்து அவங்க தெருப் பக்கம் போனேன். உங்க மருமகளைப் பார்த்தேன்'' என்றாள்.

சந்தோஷம் தாளவில்லை ஜானகிக்கு: பள்ளிக்கூடத்துக்குப் போவதற்கு முன்பே அங்கே போய் அவளைப் பார்த்து வாழ்த்தி விட்டு வரவேண்டும் போலிருந்தது. ஆனால் பள்ளிக்கூடம் விட்டதும் போகலாம் என் றிருந்து விட்டாள்.

பள்ளிக்கூடம் விடுகிறபோது உடம்பு மிகவும் களைப்பாக இருந்தது. ஓர் அடிகூட எடுத்து வைக்க முடியவில்லை. அருகே நின்ற ஒரு ரிக்ஷாவைக் கூப்பிட்டு அதில் ஏறி வீட்டுக்குப் போனாள்.

டாக்டர் வீட்டுக்குப் போய்விட்டுத் திரும்பிக் கொண்டிருந்தாள் ஜானகி.

நாலு நாட்களாகக் கொஞ்சம் இருமல்: உரக்கப் பேச முடியவில்லை.

''எங்கே போய் வர்றே?'' எதிரில் வந்து கொண்டிருந்த அவள் மகன் கேட்டான்.

''டாக்டர் வீடு வரைக்கும்....''

''உடம்புக்கென்ன?''

''நாலு நாளாக ஒரே இருமல். வாய் திறக்க முடியவில்லை.''

''எங்க வீட்டுக்கு வந்துவிடேன்? எதுக்கு வீணு தனியாக் கஷ்டப்படறே?''

ஜானகிக்கு ஒரு கணம் சிரிப்பு வந்தது.

''போன வருஷம் சித்ராவுக்குக் குறைப் பிரசவமானபோது கவலைப்பட்டியே? உன் குறை தீர்ந்துவிடும். அவள் திரும்ப முழுகாம லிருக்காள்.''

''நிஜமாகவா?''

''ஆமாம். நாற்பது நாளாச்சு.''

''நான் வரேன். ரெண்டு மாசம் லீவு போட்டுட்டு வரேன். அவளைப் பத்திரமாகப் பார்த்துக்க!''



''வந்துடு. நாளைக்கே வந்துடு. நான் வந்து கூட்டிப் போறேன். ஒரு டெம்போவிலே சாமானை எடுத்துட்டுப் போயிடலாம்!''

''அதெல்லாம் வேண்டாம் வீட்டைப் பூட்டிக்கிட்டு வந்து அங்கே இருக்கேன். அப்புறம் திரும்பி வந்துடறேன். அவன் தன் பொறந்த வீட்டுக்குப் போய் வர வேணுமா?''

இரண்டு மாதப் பொழுதை அங்குமிங்குமாகக் கழித்தாள் ஜானகி.

இருவரும் ஜானகியைப் பார்த்து அடிக்கடி சொன்னார்கள்: ''எத்தனை நாளைக்கு உழைப்பீங்க? வேலையை விட்டு நின்னுடுங்க. உங்க உடம்பு ரொம்ப வீக்காக இருக்கு!''

ஜானகிக்கே வியப்பாக இருந்தது. இத்தனை கனிவு எப்படி அவர்களுக்குப் பிறந்தது? ஒருவேளை தனக்கும் எங்கேயோ ஒரு நல்ல காலம் ஓட்டிக் கொண்டிருக்கிறதோ?

**வை**கையில் ஸ்வீட்டோடு வந்து நின்றான் செந்தில்.

''பிள்ளை! ராத்திரி பத்து மணிக்கு!''

''வெரி குட்! ரொம்ப சந்தோஷம்!''— சின்னப் பெண்ணைப் போலக் கத்தினாள், ஜானகி. ''ஆஸ்பத்திரியா, வீடா?''

''நர்ஸிங் ஹோமில்தான். வா, போய்ப் பார்த்துவிட்டு வரலாம். துணைக்கு அவனோட அக்காள் இருக்கிறாள்.''

செந்திலோடு போய்க் குழந்தையைப் பார்த்துவிட்டு வந்தாள். பேரனைப் பார்த்ததில் புதிதாக ஒரு தெம்பு வந்தது போலிருந்தது. பள்ளிக்கூடத்துக்கு வந்து எல்லோரிடமும் சொல்லி மகிழ்ந்தாள். தினமும் மாலையில் நர்ஸிங் ஹோமுக்குப் போய்க் குழந்தையைப் பார்த்துவிட்டு வந்தாள். அன்றுடன் ஐந்தாவது நாள் முடிந்தது.



மருத்துவ மனையிலிருந்து வெளியே வந்த ஜானகியிடம் ''அம்மா, எத்தனை நாள் நீ வேலை செய்வே? உனக்கோ உடம்பு மிகவும் பலவீனமாக இருக்கு. நீயா ஏன் கட்டாய ஓய்வை வாங்கிக்கக் கூடாது?'' என்றான் செந்தில்.

''ஏன்? வேலையை விட்டுட்டு உன் பிள்ளையைப் பார்த்துக் கொள்ள வேணும் என்றியா? எனக்குத் தெரியும். நீங்க ரெண்டு பேரும் வேலைக்குப் போறவங்க. நான் வீட்டோடு கிடந்து உங்களுக்குப் பயந்து செத்துக்கொண்டு நிம்மதி இல்லாமல் ஒவ்வொரு நாளையும் ஒவ்வொரு யுகமாகக் கழிக்கணுமா? வெளியே போனது நீங்க. என்மீது நிஜமாகவே ஆசை இருந்தா நீங்களாகவே என் வீட்டுக்குத் திரும்பி வாங்க. ஓர் ஆளைப் போட்டு அந்தக் குழந்தையைப் பார்த்துக்கச் சொல்றேன்.'' தீர்மானமாகச் சொன்னாள் ஜானகி.

''அந்த ஆளை நானே போட்டுக்க மாட்டேனா? உன் மேலே இருக்கிற பாசத்திலே சொல்றேன். சொல்றதைக் கேளு!''

''முடியவே முடியாது. ரிடையராகி வருவேனே தவிர நானாக நிற்க மாட்டேன்!''

''அப்புறம் உன் விருப்பம்:'' என்று சொல்லிவிட்டு நின்றுகொண்டான் செந்தில்.

**இ**ரண்டு நாட்கள் கழித்துச் செந்தில் வந்தான்.

''குழந்தையைக் கூட்டிக்கிட்டு இங்கேயே வந்துடறோம்!''

அவன் விடுவதாக இல்லை.

சிறிது விநாடி அமைதிக்குப் பின்னால் ஜானகி சொன்னாள்:

''செந்தில், எனக்கு ரொம்ப சந்தோஷம். வந்துவிடு! இப்போதாவது இந்த எண்ணம் வந்ததே! நேத்து டாக்டரைப் பார்த்தேன். செய்த டெஸ்டில் நல்லாத் தெரிஞ்சு போச்சாம். காச நோய்தானாம்! முழுமையா ஓய்வு தேவைன்னு சொன்னார். நானே வேலையை விட்டுவிடுவதாக முடிவு செய்திருக்கேன். வயசான காலத்திலே பேரனைப் பார்த்துக்கிட்டு வீட்டோட கிடப்பேன்!...''

''நான் அவளைக் கலந்துக்கிட்டு நாளையே வந்துடறேன்'' என்றுசொல்லிவிட்டு வெளியேறினான் செந்தில்.

பத்து நாட்கள் ஓடிவிட்டன.

செந்திலைக் காணவில்லை. அவனைப் பொறுத்தவரையில் 'நாளை' இன்னும் வரவில்லை. 'நாளைக்கு' என்று கவரில் எழுதிவிட்டுப் போயிருந்தாலும் நன்றாக இருந்திருக்கும். தெரிந்தே ஜானகி இப்படி ஒரு பொய்யைச் சொல்லிப் பார்த்தாள். அவர்கள் வரமாட்டார்கள் என்று அவளுக்கு அப்போதே தெரியும்.

''எனக்கு நாற்பத்திரண்டு பேரன்மார்கள் உண்டு:'' என்று அவள் தனக்குள்ளேயே சொல்லிக் கொண்டபோது கண்கள் கண்ணீரைச் சுரந்தன.

TEXTILES, SUGAR,
INDUSTRIAL CHEMICALS,
ALCOHOLIC BEVERAGES,
VANASPATI, PVC, RAYON TYRE CORD,
FERTILIZERS,
ELECTRONIC CALCULATORS,
IRON CASTINGS.

**IN THE SERVICE OF THE NATION**



DCM THE DELHI CLOTH AND GENERAL MILLS CO. LTD., DELHI

# ஒரு பாடல் படமாகிறது!



''பாடல் — நடனத்தை எந்த இடத்தில் புகுத்தலாம்?'' டைரக்டர் கே. பாலசந்தர் திரைக்கதை — வசன நோட்டுப் புத்தகத்தைப் புரட்டிப் பார்த்துக் கொண்டே யோசிக்கிறார்.



''வாங்க, வாங்க! ரோஜா மணம் போல் உங்க இசையும் எங்கும் மகிழ்ச்சி மணம் பரப்பணும்'' என்று வாழ்த்தித் தயாரிப்பாளர் துரை, இசையமைப்பாளர் விசுவநாதனையும் டைரக்டர் பாலசந்தரையும் மலர் மாலைகள் அணிவித்து வரவேற்கிறார்.



'' அதாவது 'மனிதனின் மறுபக்கம்' எப்படிங்கிறதைக் கதையிலே சொல்றீங்க. அதிலே இந்த ஒரு விச்சுவேஷனை நான் புரிஞ்சுக்கிட்டிருக்கிறது சரிதானே?'' — பாடல் அமைய வேண்டிய கட்டத்தை இசையமைப்பாளரும் இயக்குனரும் விவாதிக்கின்றனர்.



''உங்களுக்கென்னங்க! ஒரே ஒரு தரம் நான் ஹார்மோனியத்தில் வாசிச்சுக் காட்டினா போதுமே?''— பாடல் இடம்பெற வேண்டிய கட்டத்தைப் பற்றி டைரக்டரிடம் கேட்டறிந்து கொண்ட பாடலாசிரியர் கண்ணதாசனும் இசையமைப்பாளரும் ஆலோசிக்கின்றனர். தேவையான சிறிய மாற்றங்களை இருவருமே செய்து கொள்கின்றனர்.



''கவியரசு, ரொம்ப அருமையா பாட்டு போட்டிருக்காருங்க. ஆர்கெஸ்ட்ராவோடு சேர்த்துக் கேட்கறீங்களா?'' — டைரக்டரிடம் இசையமைப்பாளர் இறுதி ஒப்புதல் பெறுகிறார்.

எஸ்.பி. பாலசுப்பிரமணியம் வந்துவிட்டார். ''ஓ.கே. ட்ரயல் பார்த்துவோமா?''





ஒத்திகைகள் முடிந்து ரிகார்டிங்கின் போது எஸ். பி. பாலசுப்பிரமணியம் பாட...



...ரிகார்டிங் நடக்கிறது. ''மனிதனின் மறுபக்கம்'' படத்தில் திரைப்பட டைரக்டராகவே நடிக்கும் ரஜினிகாந்த் ரிகார்டிங்கைக் கவனிக்கிறார். அவர் அருகே எம். எஸ். வி. நிற்கிறார். முன்னணியில் ஒலிப்பதிவு நிபுணர்கள் மாணிக்கம், சம்பத்.

பாடல் படமாகிறது. காமிரா கோணத்தை இயக்குனர் சரி பார்க்க....





....தேவும் ரஜனியும் ஆடிப்பாடி நடிக்கின்றனர். பாடலின் முதல் வரிகள்:

''அம்மாடி! கையை எங்கே வெக்கம்
வருது — நான்
ஆணா பொறந்ததுக்கு துக்கம் வருது!
கம்மாச்சும் காலிரண்டும் டக்கம்
வருது—நீ
தொட்டாக்க எங்கிருந்தோ
சொர்க்கம் வருது!''

தொகுப்பு: சலன்

# இன்னும் ஒரு ஏக்கம்!

கண்ணதாசன்

நான் திரைப் பாடல் எழுதத் தொடங்குவதற்கு முன்னாலேயே, பாபநாசம் சிவன் போன்றவர்கள் திரைப்பாடலை இலக்கியமாகத்தான் வடித்துக் கொடுத்துக் கொண்டிருந்தார்கள்.

அந்தக் காலங்களில் பழைய தமிழிலக்கிய மரபுகளை எல்லாம் எளிமைப் படுத்த வேண்டும் என்ற எண்ணம் எனக்கிருந்தது.

உதாரணமாக, கம்பனின் ராம காதையில் வரும், 'தோள் கண்டார், தோளே கண்டார்' என்ற பாடலையும், 'கைவண்ணம் அங்கு கண்டேன், கால் வண்ணம் இங்கு கண்டேன்' என்று முடியும் பாடலையும் அந்தக் காலத்திலேயே வேறு மாதிரி திரைப்பாடலாக எழுதி, நான் பாடிப் பார்த்ததுண்டு.

எனது பாடல்கள் சிலவற்றில் பழந்தமிழ் இலக்கியங்களின் சாயல் தட்டுப்படுகிறதென்றால், அதற்கு அந்த இலக்கியங்களின் மீதுள்ள பற்றுத்தான் காரணம்.

இப்படி ஒன்றை எடுத்து இன்னொன்றில் கையாள்வதற்குத் தமிழ் இலக்கணத்திலேயே ஒரு சூத்திரம் இருக்கிறது.

'முன்னவர் சொன்ன மொழி பொருள் அன்றியும், அன்னவர் சொல்லும் பொன்னே போல் போற்றுதல்' என்பதே அது.



ஒரு உதாரணம் சொன்னால், பழம் பெரும் கவிஞர்களே எப்படி இதனைக் கையாண்டிருக்கிறார்கள் என்பதனைச் சாதாரண மக்கள் உணர்ந்து கொள்வார்கள்.

'தெய்வம் தொழாஅள் கொழுநற்றொழு தெழுவாள் பெய்யெனப் பெய்யும் மழை' என்பது, வள்ளுவர் வாக்கு.

'தெய்வம் தொழாஅள் கொழுநன் தொழுவாளை தெய்வம் தொழும் தகைமை திண்ணிதால்' என்று, இதனை இளங்கோ அடிகள் எடுத்தாண்டிருக்கிறார்.

அதுபோல் கம்பராமாயணப் பாடல்கள் சிலவற்றைப் பிற்காலக் கவிஞர்கள் உருமாற்றியே அமைத்திருக்கிறார்கள்.

உதாரணங்களைச் சொல்லிக் கொண்டே போனால் கட்டுரை விரிந்து விடும்.

'அக்கமும் சுற்றமும் அகத்து மட்டே' என்ற பட்டினத்தார் பாடலைத்தான், 'வீடு வரை உறவு' என்று நான் எடுத்தாண்டேன்.

ஓர் இலக்கியக் கருத்தை எடுத்து அதை அழகாகக் கையாளுவதொன்றும் சாதாரணமான விஷயமல்ல. தெரியாமல் பலபேர் திண்டாடிக் கொண்டிருக்கிறார்கள்.

என்னுடைய பழைய பாடல்களை வைத்தே, சிலர் தங்கள் புதிய வண்டியை ஓட்டிக் கொண்டிருக்கிறார்கள்.

நான் காலத்தை வீணாக்காமல் இன்னும் சற்று அதிகமான இலக்கியங்களைப் படித்திருந்தால், இன்னும் எவ்வளவோ அழகான முத்துக்களை அள்ளித் தெளித்திருக்க முடியும்.

கவிதை, திரைப் பாடல்கள் இரண்டிலும் நான் சில சாதனைகள் செய்திருப்பதாக நண்பர்கள் கூறுவார்கள். 'இனி யாராலும் இந்த அளவுக்கு முடியாது' என்று அவர்கள் சவால் விடுவார்கள். ஆனால் என் மனத்தில் மட்டும் ஓர் ஆதங்கம் நிறைந்திருக்கிறது.

'எவ்வளவோ அற்புதமான காலங்களை வேறு பல துறைகளில் வீணாக்கி விட்டோமே! அவ்வளவு காலங்களையும் இலக்கியத் துறைக்கே அர்ப்பணித்திருந்தால் இன்னும் பல தலைமுறைகளுக்கு நம் பேர் நிலைத்திருக்க முடியுமே' என்பதே, அது.

அடுத்த பிறப்பிலாவது என் கண்ணன் எனக்கு அதை அருளுவான் என்ற நம்பிக்கை எனக்கு உண்டு.

# உத்தரமேரூர் உத்தமத் தேர்தல் முறை

ஸ்ரீ ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராசாரிய சுவாமிகள்




ஜனங்கள் அவரவருக்கும் பிடித்தவர்களாகப் பல பேருக்குச் சீட்டுப் போட்டிருக்கிற போது எல்லோரையும் பதவிக்கு அமர்த்த முடியாதுதான். அக்காலத்தில் 'ஸம்வத்ஸர வாரியம்' என்பதாக ஒரு வருஷத்துக்கான ஜெனரல் அட்மினிஸ்ட்ரேஷனை (பொது நிர்வாகத்தை)க் கவனிக்க 12 பேர், 'தோட்ட வாரிய'த்துக்கு 12 பேர், 'ஏரி வாரியத்'துக்கு ஆறு பேர் என்றெல்லாம் மொத்தம் 30 பேர் ஆண்டுதோறும் நியமிக்கப்பட்டார்கள். ஆகவே ஒவ்வொரு வாரியத்துக்கும் ஜனங்கள் சீட்டுப் போட்ட பல பேர்களிலிருந்து பன்னிரண்டு அல்லது ஆறு பேர்களைத்தான் பொறுக்கி மொத்தத்தில் 30 பேர் எடுக்க வேண்டும்.

ஈஸ்வர ஸாக்ஷியாக, பகவானுக்குப் பயந்து, தேவாலயங்களின் வெளிமண்டபத்தில் எல்லோரும் பார்க்க பப்ளிக்காகத் தேர்தல் நடக்கும். குழந்தையிலிருந்து கிழவர் வரை எல்லோரும் அதற்கு வருவார்கள். ''பால விருத்தம்'' என்று இதை சாஸனத்தில் சொல்லியிருக்கிறது. அப்போது கிராமத்து மஹாஸபையினர் எல்லோரும் கூடியிருப்பார்கள். ஒவ்வொரு குடும்பிலும் இருக்கிறவர்கள் ஓலை நறுக்காலான தங்கள் சீட்டைக் குடும்புவாரியாகப் போடுவதற்காகக் கொண்டு வந்து கொடுப்பார்கள். ஒவ்வொரு குடும்புக்கும் 'ரெப்ரஸென்டேஷன்' (பிரதிநிதித்வம்) இருக்கும்படியாக, பல வாரியங்களுக்கு முப்பது அங்கத்தினர்கள் தேர்ந்தெடுக்கப்பட வேண்டுமென்றால் அதற்கேற்றபடி ஊரையும் முப்பது குடும்புகளாகவே பிரித்திருக்கும். ரொம்பவும் நேர்மையும், கண்டிப்பும் உள்ள மத்யஸ்தர்கள் அந்தக் குடும்புகளின் ஓலைச் சீட்டுக்களை வாங்கி ஒரு குடத்தில் போடுவார்கள். ஒரு விதத்தில் இந்தக் குடம்தான் அந்தக் கால வோட்டுப் பெட்டி! குடத்தில் ஓலை போடப் படுவதுதான் குடவோலை முறை. கோவிலில் பூஜைசெய்கிற அர்ச்சகர்கள் (இவர்களை ''நம்பிமார்'' என்று சொல்லியிருக்கிறது.) எல்லாரும் தவறாமல் தேர்தலுக்கு வரவேண்டும். அரசியல், ஸமூஹம் எல்லாக் காரியங்களையும் ஈச்வரனுக்குப் பொதுவாக நடத்தினர்.

எல்லாருடைய வோட்டுச்சீட்டும் வந்து சேர்ந்தபின் நம்பிமார்களுக்குள் வயதில் பெரியவர் எழுந்து, கபடமற்ற ஒரு சின்னக் குழந்தையைக் கூப்பிட்டு, ஒவ்வொரு குடும்புக்குமான ஓலைச்சீட்டுக் குடத்திலேயிருந்து அதன் கையினால் ஒரு சீட்டை எடுத்து மத்யஸ்தரிடம் கொடுக்கும்படி சொல்வார். 'திரு உள்ளச்சீட்டு' என்று ஒரு வார்த்தை அடிபடுகிறதே, அது சீட்டுப்போட்டு எடுக்கிற பேர் பகவத் ப்ரீதியாக, ஈச்வர ஸங்கல்பத்தில் அமைந்தது என்ற அர்த்தத்தில் தான் ஏற்பட்டிருக்கிறது. இந்தத் தேர்தலோ கோவிலிலேயே, கோவில் பூஜகர் பங்கு கொண்டே நடக்கிறது. மோசம், சூது தெரியாததில் தெய்வத்துக்கு ஸமானமான குழந்தையைக் கொண்டு சீட்டு எடுக்கச் செய்தார்கள். அந்தச் சீட்டை மத்யஸ்தர் விரிக்கப்பட்ட விரல்களுடன் கூடின கையினால் வாங்கிப் பேரை வாசிப்பார். அவர் ஏற்கெனவே ஒரு சீட்டை ஒளித்து வைத்துக்கொண்டு, 'ட்ரிக்'காக அதை இப்போது கையில் 'ஸ்விப்' பண்ணிக்கொள்ளாமலிருக்கவே இப்படி ஜாக்ரதை செய்திருக்கிறது! ''அக்குடுத்த வோலை மத்யஸ்தன் வாங்கும் போது அஞ்சு விரலும் அகலவைத்து ஏத்துக் கொள்ளுவானாகவும், அவ்வேத்து வாங்கின வோலை வாசிப்பானாகவும்'' என்று சாஸனத்தில் இருக்கிறது. இம்மாதிரி மத்யஸ்தர், 'எலெக்ட்' ஆனவரின் பேரைப் படித்தவுடன் அங்கே இருக்கும் நம்பிமார்கள் எல்லாரும் அந்தப் பேரை ஒவ்வொருத்தராகப் பிரகடனம் செய்வார்கள். அப்புறம் அது அஃபிஷியலாக எழுத்தில் பதிக்கப்பட்டு, அன்னார் ஸபையின் அங்கத்தினராகி விடுவார். அப்புறம் ஒரு வருஷம் அவருக்குப் பதவிக் காலம். மறு வருஷம் மறுபடியும் இதே மாதிரித் தேர்தல்.

(தொடரும்)

Printed by V. Murali and published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd., at the Bharathan Press, Guindy, Madras - 600 032. Editor: K. Rajendran

# புதிய திருப்பம்



ஒளி கூட்டும் ஸ்டைல்கள்—
எழில் காட்டும்
புதிய பாணிகள் — உங்கள்
அழகுக் கோலத்தை
வெளிப்படுத்தும்.

**மபத்லால் இன்டஸ்ட்ரீஸ்** நியூ ஷொராக் மில்ஸ்
**மபத்லால் ஃபைன்**

ஆட்டிங்குகள், ஷர்ட்டிங்குகள்,
சேலைகள், மற்றும் உடுப்புத் துணிகள்

MAFATLAL INDUSTRIES
MAFATLAL FINE

79/MFI/312-tm

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka
இலங்கையில் விலை 90 சதம் (தபால் செலவு தனி)
மலேசியாவில் விலை (விமானப்பதிப்பு) 75 மலேசியக் காசு